

கட்டிடத் திறப்பு விழாவின் போது, திரு. லால்குடி ஜெயராமன் அவர்கள் தி.தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வானக அமைச்சரவர்களால் கௌரவிக்கப்பட்டார்.

இவ்விழாவின் போது தி.தி. தேவஸ்தானத்தின் செயலாட்சித்தலைவர், பொறுப்பாண்மைக்குழுத் தலைவர், உதவி செயலாட்சித்தலைவர் மற்றும் பல தேவஸ்தான அலுவலர்களும் பங்கேற்றனர்.

திருப்பதியில் 20-4-79 அன்று தி. தி. தேவஸ்தான நிருவாக அலுவலகக் கட்டிடம் ஆந்திர மாநிலத்தின் அப்போதைய அற நிலையத்துறை அமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.



நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வானக அமைச்சரவர்களால் கௌரவிக்கப்பட்டார்.



இவ்விழாவின்போது தி. தி. தேவஸ்தான அலுவலகக் கட்டிடத்தில் ''தொலை பேசி இணைப்பகத்தை'' அமைச்சரவர்கள் திறந்து வைத்தார்.





கொண்டவேல நெத்தினட்டி கோவிநதா—நின்னு
கொண்டிஞ்சேறு யசோதகு கோவிந்தா (பலலவி)

கோல்லெதலு மொக்கேறு கோவிந்தா—நீ
கொல்லல சிரலிபமனி கோவிந்தா
கொல்லு வெண்ணதொஙகிலக கோவிந்தா-நின்னு
கொல்லுன நவ்வேறு வீறே கோவிந்தா (கொண்ட)

கோவுல காச்சே வேள கோவிந்தா—பிலல
கோவினி வடிசிரி கோவிந்தா
கோவாள்ளுலெ யமுனலோ கோவிநதா—நீது
கோவர முன்னுறுரா கோவிந்தா (கொண்ட)

கொடடேடடி உட்லகிந்த கோவிந்தா-நீதோ
கொட்டெவாடை பெனகேறு கோவிநதா
குட்டுதோ ஸ்ரீவேங்கடாத்ரி கோவிந்தா—கூடி
கொட்டான பெட்டேறு பததி கோவிநதா

*(அன்னமாச்சார்யா பக்தி கீர்த்தனைகள்-தொகுதி 22-எண். 325)*

*(அன்று விரலால் மலையெடுத்துப் பலரைக் காத்த கோவிந்தா, உன்மீது யாசோதையிடம் வீணே பலர் பழி சுமத்துகின்றனர்.*

*மறைந்திருந்து நீ திருடிய ஆடைகளைத் திருப்பித் தருமாறு. இடைச்சியர் உன்னைப் பலவாறு வேண்டு கின்றனர் கோவிந்தா, அன்று உன் நணபாகளுடன் நீ வெணணெய் திருடும்போது, உன்னைப் பார்த்துக் 'கொல்' லென று சிரித்தவர்களும் இவாகள்தாம் கோவிந்தா.*

*பசுக கூட்டத்தினை நீ மேய்த்துக் கொண்டிருந்த வேளையில் உனனிடம இருந்த (புல்லாங்) குழலை விரும்பி கேட்டனர் கோவிநதா, யமுனை நதித் தீரத்தில் நீ குளித்துக் கொண்டிருந்தபோது உன் நலனை விரும்பி மனமுருகி பிரார்த்திக்கின்றனர் கோவிந்தா.*

*தடிகொண்டு வெணணெய் உறியினை நீ அடிக்கும் வேளையில், உன் பகைவர்கள் உன்னுடன் போராடுகின் றனர் கோவிந்தா, வேங்கடமலையில் இருப்பவனே உன்னன்பர்கள் உன்னிடம் வைத்துள்ள பெரும் பக்தியை ஓர் அடைப்பில் முடி வைத்திருக்கின்றனர் கோவிந்தா.)*






# ஸப்தகிரி

ஜூன் 1979

மலர்: 10 இதழ் 1

தனிப்பிரதி 50 காசு.

வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:

திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,

செயலாட்சித்தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.

தி. தி. தேவஸ்தானம்.

திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,

மேலாளர்,

தி. தி. தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

முழு விவரங்களுக்கு,

EDITOR

'Sapthagiri'

T T. D. Press Compound,

TIRUPATI-517501.

# உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| ஆசிரியர் உரை | ... | 3 |
| திருமலை ஒழுகு | ... | 5 |
| நம்பிக்கையின் அவசியம் | ... | 8 |
| அனுமன் திகைத்தான் | ... | 9 |
| பரசுராமேஸ்வர ஆலயம—குடிமல்லம் | .. | 11 |
| பழமொழியும் கம்பராமாயணமும் | ... | 13 |
| ஆட்கொள்வான் வேங்கடவன் | ... | 16 |
| அன்னமய்யா புகழ் | ... | 17 |
| சிறையிருந்த செல்வி | ... | 29 |
| ஓர் அணுவையும நீயே அசைப்பாய் ! | ... | 32 |
| கீதை காட்டும் நல்வழி | ... | 33 |
| தசாவதாரப் பத்து | ... | 36 |
| செய்திச் சுருக்கம் | ... | 37 |
| ராசி பலன் | ... | 39 |


அட்டைப் படம்: கருடவாகனத்தில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி-திருப்பதி.

# ஆசிரியர் உரை

இயற்கையின வனப்பில் மயங்கி பேச்சிழந்து தன்னை மறக்கும் மனிதன், அவ்இயற்கையால் தொடர்ந்து தாக்கப்படும போதும் செயலிழந்து வாய்மூடி மௌனியாகிவிடுகின்றான். இரண்டாவதாகக் கூறப்பட்ட ஒரு சூழ்நிலைக்கு இன்று ஆந்திர மாநில கடலோர நகர்வாழ் மக்கள் ஆளாகியுள்ளனர். கடந்த சில மாதங்களுக்குமுன்னர்தான வங்ககடலில் எழுந்த கோரப்புயலும், கடல கொந்தளிப்பும் தென்னிந்தியாவைக் குறிப்பாக ஆந்திர மாநிலதத்தினைத் தாக்கி, அங்கு ஆயிரககணக்கான உயிர்களை பலிகொண்டு, ஏராளமான பொருள் சேதததினையும் ஏற்படுத்தியது. இயற்கை அளித்த அப்பெரும் தண்டனையிலிருந்து ஆந்திர மக்கள் மீளுதற்கு முனனமேயே, கடந்த வாரம் உருவாகிய மற்றொரு புயலும், அதன விளைவாக பெய்த பேய் மழையும அவர்களை மேலும் நிலைகுலையச் செய்துவிட்டன. இம்முறை, உயிர்சசேதம் அவ்வளவாக இல்லாவிட்டாலும பொருட் சேதம் முன்புவிட பல மடங்கு அதிகமாகவே உள்ளது.

விஞ்ஞான உலகில் கொடி கட்டிப்பறக்கும மனிதனால், ''புயல் வரப போகிறது, வெள்ளம் புரண்டோடப் போகின்றது'' என்பதனை அறிந்திருந்தும் அவற்றைத் தடுத்து நிறுத்தவோ, அவை வழங்கும் தண்டனையிலிருந்து தபபவோ முடிவதில்லை, ஆம, மனிதனின இயலாமையும், காலம் மற்றும் விதியின் வலிமையும அவவப்போது உணர்த்தப்பெறுகின்றன. இதற்குச் சான்றாக இப்புயல் விளங்கியது. ஏற்பட்ட சேதத்திலிருநது மீளுதறகு மாதங்கள் பல ஆகலாம போல் உள்ளது. நேற்று வரை தனதென்று, தனக்கென்று உரிமை கொண்டாடிய ஆயிரக்கணக்கான மககள் இன்று வானமே கூரையாகவும், தரையினையே படுக்கையாகவும, எதிர் காலத்தினை ஒரு கேள்விக் குறியாகவும் கொண்டு, பித்தம் பிடித்த நிலையில் மற்றவர்களின் உதவியை நாடவேண்டிய ஒரு கட்டாயச் சூழ்நிலையில் உள்ளனர்.

இத்தகு சமயததில்தான் மனிதனின் உண்மை உருவம வெளிப்படுகின்றது. மனிதாபிமானம் மிகக உள்ளங்களின் ஒருமித்த குரலின் எழுச்சி இதுபோதுதான் அறியப்படும. ஆயிரக்கணக்கான அன்புச் சகோதரர்களின் ஆதரவற்ற நிலையை ஆதாயத்தோடு நோக்காமல, ஆதங்கததோடு அணுகுவது அவசியமாகின்றது. இவ்இயற்கையால விளைந்த உயிர் மற்றும் பயிர்ச் சேதத்தினை ஒரு தனிமனிதனின் அல்லது ஒரு பகுதியினரின் இழப்பாகக் கருதாமல், நாட்டின் பெரும் நஷ்டமாகக கொண்டு, தங்களாலியன்ற உதவியினை வழங்கும் போதுதான் மனிதப் பிறவியின் அடிப்படை இலட்சணங்களுக்கு பெருமையாகும். அப்பெருமைக்குச் சிறப்பு சேர்க்கும் வகையில, அநாதரவாக விளங்கும் நம் உடன்பிறப்புக்களுக்கு நாம் இத்தருணத்து உதவி புரிந்தால, அது சிறிதாயினும அதுவே சிறு துளி பெருவெள்ளமாக விளங்கும்.

இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் தன்னாலியன்ற உதவிகளை செய்து வருகின்றது. முன்பு நடந்த இயற்கைத் தாக்குதல்களுக்கு இலக்கான பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு உதவும் வகையில பல இலட்ச ரூபாய்களை ஒதுக்கி, மேலும் தானே தன்னுடைய நேரடிப பொறுப்பின்கீழ கடலோரப் பகுதிகளில் 'புயல் புகலிடங்களை' கட்டி வருகின்றது. எனினும் தி. தி. தேவஸ்தானம் தன் பங்காக எவவளவுதான் உதவிகள் புரிந்திட்டாலும், அவை தற்போது நடந்த இழப்பிற்கு முன் ஒரு சிறு துளியாகவே அமையும்.

இரக்கம் அன்பு ஆகியவைகள் மனிதனை மற்றைய உயிரினங்களிலிருந்து பிரித்து உயர்த்திக் காட்டும் பெருமைக்குரிய பண்புக கூறுகளாக அமைவதால, அவற்றிற்கு சிறிதும சிறுமை நேராத வாறு ஒவ்வொருவரும், மனிதர்களால் நிறுவப்பட்ட மனிதாபிமானம் மிக்க சமய நிறுவனங்களும் அறநிலையங்களும முன் வந்து, இழந்தவர் இழந்ததையெல்லாம் பெற முடியாவிட்டாலும், எதிர்கால வாழ்க்கையில் நம்பிக்கையிழக்கா வண்ணம அவர்களுக்கு உதவினால் அதுவே 'காலத்தினால் செய்த நன்றியாக அமையும.

# ஸப்தகிரி வாசகர்களுக்கும் விற்பனைப் பிரதிநிதிகளுக்கும்

பொதுவாக பத்திரிகைத் துறையின் வளர்ச்சி பெருமைப்படும் வகையில் விளங்கினாலும் துவக்கப்பட்ட பத்திரிகையின் தரத்தினையும் விற்பனையையும் தக்கவைப்பது ஒரு சவாலாகவே இருநது வருகிறது. அதிலும் சமயப் பத்திரிகையினை நடத்துவது ஒரு பெரும் பிரச்னையேயாம். ஏனெனில் சமயப் பத்திரிகைக்கான வாசகர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்கள் என்பது வருத்தப்பட வேண்டிய உண்மையாகும். இதற்கான அடிப்படைக் காரணம் சமய பத்திரிகைக்கும், இளைஞர்கள் மற்றும் இளம எழுத்தாளர்களுக்கும் உள்ள பெருத்த இடைவெளியேயாம். இதனை மனதிற்கொணடுதான் 'ஸப்தகிரி' இதழ் குறைந்த விலையில் விற்கப்பட்டு, புதிய மற்றும் இளம் எழுத்தாளர்களுக்கும், ஸப்தகிரி விற்பனைப் பிரதிநிதிகளுக்கும் ஊக்கம் அளிக்கும் வகையில் தி· தி. தேவஸ்தானம் கீழ்வரும் சில முடிவுகளை இம்மாதம் முதல் அமுல்படுத்த உள்ளது. எனவே இத்தருணத்தினை அவாகள் ஓர் அரும் வாய்ப்பாகக் கொள்ளுவார்கள் என்றே நம்புகிறோம்.

* ஸப்தகிரியில் வெளியிடப்படும் சமயம், அற இலக்கியம் சம்பந்தப்பட்ட கதை கட்டுரைகளுக்குத் தகுந்த சன்மானம் வழங்குதல்.
* ஸப்தகிரியில் வெளியிடப்படும் பல்வேறு கோயில்களின் மற்றும் இறை விக்ரகங்களின் புகைப்படங்களுககுத் தகுந்த சன்மானம் வழங்குதல்.
* அதிக அளவில் ஸப்தகிரி இதழ்களை விற்பனை செய்யும் தி. தி. தேவஸ்தானத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட விற்பனைப் பிரதிநிதிகளுக்கு இறையுருவம் பொறிக்கப்பட்ட ''வெள்ளி டாலர்'' வழங்குதல்.
* ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை கட்டுரைகளின் ஆசிரியர்களுக்கு 5 ஸப்தகிரி இதழ்கள் இலவசமாக அனுப்புதல்.

இதுமட்டுமன்றி, ஸப்தகிரி விற்பனைப் பிரதிநிதிகளை மேலும் ஊக்குவிக்கும் விதத்தில் மேலும் பல சலுகைகள் அவர்களுக்கு வழங்க தி. தி. தேவஸ்தான மேலாணமை தீர்மானிததுள்ளது.

ஸப்தகிரி வெறும், தி. தி. தேவஸ்தானம் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை மட்டுமே வெளியிடும் ஒரு மாத பத்திரிகையாக விளங்காமல் சமயம் சம்பந்தப்பட்ட கதை கட்டுரைகள் மட்டுமன்றி, குமரி முதல் இமயம் வரை உள்ள முக்கியமான பெரும் இந்துக் கோயில்களில் நடைபெறும் இந்து சமயம் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் வெளியிட்டு இந்து சமய மேமபாட்டிற்காகத் தன்னலியன்ற தொண்டினை ஆற்றிடும் பெரும் பணியில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளவும் விரும்புகின்றது. ஆகவே ஸப்தகிரி விற்பனைப் பிரதிநிதிகளும், அங்கங்குள்ள கோயில்களின் நிருவாகத்தினை மேற்கொண்டுள்ள சம்பந்தப்பட்டவர்களும் தங்களூரில் நடைபெறும் இநது சமயம் பற்றிய நிகழ்ச்சிகளை ஸப்தகிரிக்கு அனுப்பி வைத்தால் அவை தேர்ந்த பரிசீலனைக்குப் பிறகுஅனுப்பியவர்களின் பெயர்களுடன் வெளியிடப்படும்.

முழுவிவரங்களுக்கு ஆங்கிலத்தில கீழ்வரும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுக:

EDITOR
*"SAPTHAGIRI"*
*T. T. D. Editor's Office,*
*TIRUPATI—517501.*

# திருமலை ஒழுகு



## கோயில்களும் தெய்வங்களும்

திருவேங்கடமுடையான் திருக்கோயில், தொண்டைமான் சக்ரவர்த்தியால் முதல் முதலாகக் கட்டப்பட்டது என்று புராணம் கூறுகின்றது. ஆனால், அக்கோயில் அப்போது சிறிய அளவில் அமைந்திருத்தல வேண்டும். யாத்திரை செய்வோர் அங்கு மிகுதியாய்ச் செல்வதற்கு வசதியும் பிறவும் இல்லை. அக்குறையை நீக்குவதற்காகவே திருச்சுகனூரில் (திருச்சானூர்) திருவேங்கடமுடையானுக்கு திருவிளங்கோயில் அமைக்கப்பட்டது போலும். இத்திருக்கோயில், திருமலையிலிருந்த பாலாலயம் என்று கூறுவது பொருந்தாது.

''திருவேங்கடக் கோட்டத்துக் குடவூர் நாட்டுத் திருச்சொகினூர்த் திருவேங்கடத்து எம்பெருமானடிகளுக்கு எழுந்தருளிவித்த திருவிளங்கோயிற் பெருமானடிகளுக்குச் சோழநாட்டுச் சோழனூர் உலகப்பெருமானூர்வைத்த திருவிளக்கு முதல் முப்பதின் கழஞ்சு .........'' (T. T. Ins. I. Vol. No. 1) என்பது திருவிளங்கோயில் திருச்சுகனூரில் இருந்த தென்பதற்குச் சான்று பகர்கின்றது. இக்கொடை கி.பி. 830ல் அளிக்கப்பட்டது. பல்லவர் மரபில் வந்த சாமவை என்னும் அரசியாரும் திருச்சுகனூரில் அமைந்திருந்த திருவிளங்கோயிலில் உற்சவமூர்த்தியாக வெள்ளியில் ஒரு திருமேனியைச் செய்வித்து அதற்கு மணவாளப் பெருமாள என்னும் பெயரிட்டுப் பல மணிகளழுத்திய திருமுடி, திருக்கழுத்து மாலை, திருக்கரங்களுக்குரிய மணிப்பணிகள் யாவையும் சாத்தி, வேறு பிற தானங்களும் செய்துள்ளார். (T. T. Ins. Vol. I No. 8) இக்கொடை கி. பி. பத்தாம் நூற்றூண்டின் பிற்பகுதியின் தொடக்கத்தே அளிக்கப்பட்டது.

இவற்றால், திருவேங்கடமுடையானுக்குக் கொடித் திருநாள் திருச்சுகனூரிலேயே நடத்தப்பட்ட தென்பது விளங்குகின்றது. இம்முறையை மாற்றித் திருமலையிலேயே அந்த உத்ஸவத்தை நடத்துவதற்காக இராமாநுசர் ஏற்பாடுகளைச் செய்தார் என்பதும் தெளிவாகும். இராமாநுசரும், திருமலைக் கோவிலைப் பெரிதாக்கிக் கோபுரமும் கட்டுவித்தார்.

திருப்புல்லாணி தாசர் என்பாரொரு அன்பர், திருவேங்கட நாட்டை அப்போது ஆண்டு கொண்டிருந்த வீரநரசிங்க யாதவராயனது கட்டளை பெற்றுத் திருமலை நடுக்கோயிலை கி. பி. 1224-ல் புதுக்கினான். நடுக்கோயில் கோயிலாழ்வார் எனப்படும். அவ்வாறு புதுக்கியபோது சில கல்வெட்டுக்கள் சிதைந்து போயின. சிலவற்றைப் படி எடுத்து நடுக்கோயிலில் மீண்டும் வெட்டுவித்தனர். அங்ஙனம் சிதைந்த கல் வெட்டுக்களுள் இராமாநுசர் வரலாறுகளும், பின் இன்றியமையாத பழையவரலாறுகளும் இருந்திருத்தல் கூடும். அவற்றுள் சிலசிதைந்து காணப்படுகின்றன. அவற்றால் உண்மை உணரககூடவில்லை. அவை சிதையாது கிடைத்திருப்பின் பல உண்மைகள் தெரிந்திருக்கும்.

அக்கோயிலை நன்கு போற்றி வந்த வீரநரசிங்கயாதவராயன்கி.பி. 1245ல் துலாபாரம் புக்குத் தானம் செய்த பொன்னைக் கொண்டு அக்கோயிலின் விமானத்திற்கு முதல் முதலாகப் பொன் பூச்சுப் பூசப்பட்டது. அதே காலத்தில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அதற்குப்பொற்கவசம் அமைத்து வைத்தான். சாளுவமங்கி தேவன் 1359-ல் விமானத்துக்குப் பொன் கலசம் அமைத்தான். (S. T. 224) கிருஷ்ண தேவாரயன் முப்பதாயிரம் வராகன் கொடுத்து விமானத்திற்குப் பொன் பூசினான்.

இராமாநுசர் காலத்தில் இருந்த விமானம் சிதிலமாய் இருந்திருத்தல் வேண்டும். அவ்விமானம் எந்தத் தேவதையின் வடிவமும் அமைக்கப்படாமல் இருந்தமையால் அவர் அதன் நாற்புறங்களிலும் திருமால் கோயிலுக்குரிய விமான தேவதைகளை அமைத்து வைப்பாராயினர்.

திருமலைக் கோயிலில் இருந்த திருமகாமணி மண்டபத்தில் கல்காரம், குறடு முதலாக மேற்கூரை விமானம் ஈறாக உள்ளவற்றை, கி. பி. 1417-ல் சந்திரகிரியில் வாழ்ந்திருந்த மல்லண்ணவென்னும் மாதவதாசர் என்பவர் தம் திருப்பணியாகச் செய்து முடித்தார். (Ins Vol. I. 196) சாளுவ நரசிங்கராயன் காலத்தில் கி. பி. 1468-ல் திருமலையில் ஒரு கோபுரமும் மண்டபமும், திருக்கோனேரி தீர்த்தத்தில் நிராழி மணடபமும் (வசந்த மண்டபம்) அவன் கட்டளைப்படி திருமலைச் சபையரால் கட்டப்பட்டன. இவன் பல சத்திரங்களையும் கட்டுவித்தான்.

அவற்றுள அத்திகிரி ஐயன் சத்திரம் என்பது ஒன்று. இவற்றைத் தவிர, அழகப்பிரானுர் திருப் பூமண்டபம், சேதிராயன் மண்டபம் முதலாகப் பல மண்டபங்களும் இருந்தன

ஆரவீட்டு மரபைச் சேர்ந்த திரு மலய்யதேவ மகாராஜாவென்னும் திருமலை ராயன், திருமலைச் சம்பங்கிச் சுற்றுக்குள் (உள்பிராகாரம்) துவஜஸ் தம்ப (கொடக்கமப) த்திற்குத் தெற் காகக் கி. பி. 1561-ல் ஒரு ஊஞ்சல் மண்டபத்தைக் கட்டி, அதில் உற்சவ மூர்த்தியை வசந்தத்திருநாள், ஊஞ்சல் திருநாள், திருக்கொடித் திருநாள், ஆகிய காலங்களில் எழுந்தருளப் பண்ணி அமுது செய்விப்பதற்குப் பல தானங்களையும் ஏற்படுத்தினன். (T.T. 633) இப்போதும் அது திருமலைரா யன் மண்டபம் எனப்படுகின்றது.

திருமலை மேல் உள்ள கோனேரி தீர்த்தத்திற்கு மேற்காக அச்சுத தேவ ராயன் தன் பெயரால் அச்சுத கோனேரி என்னும் தீர்த்தத்தை உண் டாக்கி அதன் கரையின் மேல் வசந்த மண்டபம் ஒன்றையும் கட்டுவித்து, மலை குனிய நின்ற பெருமாளை உற்சவ காலங்களில் எழுந்தருளப் பண்ணித் திருவமுதுகொண்டருளுமாறு ஏற்பாடு கள் செய்து வைத்தான்.

இங்ஙனம், விஜயநகரத்தரசர்கள் திருவேங்கடமுடையானுக்குப் பல திருப்பணிகள் செய்திருக்கிருர்கள். அவற்றை விவரித்தால் அஃதொரு தனி நூலாகும். திருமலை திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டுக்களாலும், அவற்றின் தொகுப்புரையாலும் (Epigraphical Report) அவைகளை அறிந்து கொள்ளலாம்.

திருமலையிலுள்ள பெருமானுக்குத் தொண்டைமான் சக்ரவர்த்தி பல திவ்யாபரணங்களை அணிவித்தான். பின்னர்க் கி. பி. 1001-ல் இரண்டாம் பராந்தகச்சோழன்மனைவியாகியபராந் தகதேவி அம்மன் திருவேங்கடமுடை யானுக்குப்பொன்னுற் செய்யப்பட்டுப் பல கற்கள் இழைத்த பட்டம் ஒன்றை அணிவித்தார். இராமாநுசர், யாத வராயன் துணை கொண்டு பல அணி கலன்களைச் செய்து அணிவித்தார். சாமவை என்னும் பல்லவர் பேர்க் கடை யார் மனைவி, வயிரக் கலன்கள் பல அமைத்துச் சூட்டினுர். அவர் களுக்குப் பின் கிருஷ்ண தேவராயன் ஏழு முறைகள் வேங்கட வள்ளலை வணங்கினுன். ஒவ்வொரு முறையும் பொன் அணிகளும், வயிரமுடியும், தோரண வாயிலும், பொற் கிண்ணங் களுமாகப் பெருமாளுக் களித்துப் பல ஊர்களையும் நன்கொடையாக அளித் துப் பேறுபெற்று, திருவேங்கடமுடை யானது செல்வம் ஓங்கியிருக்குமாறு செய்தான். அவன் மனைவியர் செய் தளித்த திருவாபரணங்களுக்கும் கணக் கில்லை. ஏனைய அரசர்களும் பல அணி களை வழங்கியிருக்கின்றனர். கி.பி. 17ம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்த மட்லகுமார அநந்தராயன் என்னும் அரசன் பொற்குதிரை, பொன்யானை, திருத்தேர், பத்மபீடம், ரத்தினமுடி, நைவேத்யத்துக்குரிய பொன்வெள்ளிப் பாத்திரங்கள் ஆகிய பலவற்றை அளித்தான். திருமலை அடிவாரத் துள்ள இரண்டாவது கோபுர (புதிய கோபுர)மும், காலி கோபுரமும் இவ ளுல் கட்டப்பட்டவையே. காலி கோபுரம் இல்லாதிருந்த போது அவ் விடத்துக்குப் ''பெரிய ஏற்றத் தலை'' என்று பெயர் வழங்கி வந்ததாகவும், அங்குப் புரட்டாசித் திருநாள் சேவிக்க வரும் யாத்திரிகர்களுக்குத் தண்ணீர்ப் பந்தல்கள் கி. பி. 1488-ல் சாளுவ நரசிம்மனுல் அமைககப்பட்டனவாக வும் தெரிகின்றன. (G. T. 142)

கந்தாடை ராமாநுஜ ஐயங்கார் கி. பி. 15-ம் நூற்றுண்டின் முற்பகுதி யில், திருமலைக்கு ஏறும் படிகளைச் சீர்திருத்தினுர். செல்வன் என்பா ளெருரு இடையன திருமலையின் படிகளை முதல் முதலில் அமைத்தவன். மட்ல குமார அநந்தராயனும் அப்படிகளை ஒழுங்கு செய்து, அடியார்கள் ஏறுவ தற்கு வசதி செய்வித்தான். இபபடி கள் ஏற்படுவதற்கு முன், யாத்திரி கர்கள், ஆழ்வார் தீர்த்தக் கரை வழி யாகவே பெரிய ஏற்றத்தலை (காலி கோபுரம்) வரையில் சென்றனர் என்ப. அதனுல் தான், இன்றும் ஆழ்வார் தீர்த்தத்தில் நீராடிய பின், மலை ஏறும் வழக்கம் உள்ளது போலும். தொண் டைமான் சக்கரவர்த்தி, அத்தீர்த்தக் கரையிலுள்ள நரசிங்கர் சந்நிதி வழி

யாக ஒரு பிலத்துள் நுழைந்து வேங்கடவாணனை வணங்கி வந்தான் என்றும், அவ்வழி பெருமானாலேயே காட்டப்பட்டது என்றும் திருமலை ஒழுகு கூறும்.

யாதவராயர் மரபினனாகிய ஒபளநாதன் என்பவன் தஞ்சாவூரில் வாழ்ந்து, வடவேங்கடத்துறையும் பெருமான் தன்னுடைய திருவடியைக் காட்டியபடி அமைத்திருக்கும் வலத் திருக்கைக்குப் (வைகுண்ட ஹஸ்தம்) பொன் வேய்ந்து அழகுபடுத்தினன் என்பது கீழ்க்காணும் வெண்பாவினால் அறியப்படுகின்றது. (T.T. 117) அது,

'' ஓத வளர்வண்மை ஒபளநா
தன்தஞ்சை
யாதவர்கோன் வாழ இனிதூழி
—போத
மருக்குலவு சோலைவட வேங்கட
வாணர்க்குத்
திருகைமலர் தந்தான் சிறந்து ''

என்பது. இக்கருத்தமைந்த வடமொழிச் சுலோகமும் கல்வெட்டில் காணப்படுகின்றது. இவன்காலத்தைப் உறுதிப்படுத்துவதற்கு ஏற்ற ஆதாரம் இல்லை. சிலர் கி. பி. 1370 எனக் கருதுகின்றனர்.

மகமதுபின் துக்ளக் (Muhammad-Bin - Tughlak) என்பவன் கி.பி. 1328ல் மதுரையையும் அதன் அருகிலுள்ள ஊர்களையும் கொள்ளையடித்துக் கோயில்களைச் சூறையாடிய பொழுது, திருவரங்கத்தில் இருந்த அழகிய மணவாளப் பெருமானைக் கொள்ளைக்காரரிடமிருந்து தப்புவிப்பதற்காகச் சில நம்பிமார்கள் அவ்விக்ரகத்தை எடுத்துக் கொண்டு வந்து, திருமலையில் பாதுகாவலாக வைத்தனர். திருவரங்கத்தில் இருந்து கால் நடையாக அப்பெருமானைக் கொண்டு வருவதற்கு ஏறக்குறைய இரண்டாண்டுகள் பிடித்திருக்கும். எனவே கி. பி. 1330-ல் அப்பெருமானைத் திருமலைக் கோயிலின் முன்இடத்துள்ள மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணினார்கள். அம்மண்டபம் இன்றும் அரங்க மண்டபம் எனவே வழங்கப்படுகின்றது. இங்கே அவர் சில காலம் விருந்தாளி போலத் தங்கியிருந்தமையால் அவருக்கு முதலில் திருவாராதனம நடந்தது என்றும், அவருக்குரிய ''கங்குலும் பகலும்'' எனனும் பதிகம் திருவேங்கடமுடையான் திருமுன் ஓதப்படுகிறது என்றும் சொல்லுகிறார்கள்.

சில ஆண்டுகள் கழிந்த பின், இரண்டாம் கம்பண்ணுவின் கீழிருந்த கோபண்ணு வென்னும செஞ்சி நாட்டுச் சிற்றரசன், திருமலைக்கு வந்த போது இச்செய்திகளையறிந்து, அழகிய மணவாளரை, திருமலைச் சபையார், அரசனாகிய திருவேங்கட யாதவராயன் ஆகியவர்களின் உடன்பாடு பெற்றுக் கி. பி. 1363-ல் செஞ்சிக்குக்கொண்டு போனான். அப்போதும் மதுரைப் பக்கத்தில் மகமதியர் கலகம் தணியாமையால், அப்பெருமானை எட்டு ஆண்டுகள் செஞ்சியிலே வைத்திருந்து கலகம் தணிந்த பின் கி. பி. 1371-ல் மீண்டும் திருவரங்கத்தில் நிறுவினான். (T T Epigraphical report Page 131).

கட்டியம் யாதவராயன், அனந்தாழ்வான் கூறியபடி திருமாலை தொடுப்பதற்காக ஒரு மண்டபம் கட்டினான். அதற்கு 'யமுனைத்துறை' என்று பெயர். இப்போதும் அவ்விடத்திலே தான் பூமாலைகளைக் கட்டிப் பெருமானுக்குச் சாத்துகின்றனர்.

திருமலைக் கோயிலில் நிறுவப் பெற்றுள்ள இராமானுசரது திருவுருவம், அவர்தம் நாற்பதாம் ஆண்டில் செய்யப்பட்டது என்றும், அவர் அதனை நோக்கியருளித் தழுவிக் கொண்டு, தம் சீடராகிய அநந்தாழ்வான் பால் தந்தனர் என்றும், பின்னர் அநந்தாழ்வான், அதனைக் கோயிலில் யாதவராயன் துணைகொண்டு அமைத்தனர் என்றும் திருமலை ஒழுகு கூறுகின்றது. இவ்வுருவம் ஞான முத்திரையையுடைய திருக்கையோடு காட்சியளிக்கின்றது. ஸ்ரீ பெரும்பூதூரில் உள்ள உருவம் கூப்பிய கைகளுடன் விளங்கி வருகிறது. இராமானுசர், திருமலை திருப்பதி ஆகிய இடங்களில் பலவகையான தருமங்களை நிலைநாட்டியும், புதுக்கியும், திருவேங்கடமுடையானது திருச் செல்வத்திற்கு வளர்ச்சியுண்டாகத் தக்க பல நற் செயல்களைச் செய்தும், பிறருக்குத் தெரியாதிருந்த பல உண்மைகளை வெளிப்படுத்தியும், தாம் அளித்தருளிய திருவாழி திருச்சங்குகளைத் திருவேங்கட முடையான் ஏற்றுக்கொண்டு அவரை ஆசார்யர் போலக் கருதத்தகக சிறப்புப் பெற்றும் இருந்ததால், இவர் ஞான முத்திரையோடு கூடிய திருவுருவாக இருக்கும்படி அமைத்தனர் போலும் என்பர் பெரியோர். இங்குள்ள அத்திருவுருவம் ஸ்ரீபெரும்பூதூரில் உள்ள திருவுருவத்தை விடப் பல ஆண்டுகள் முற்பட்ட தென்பதும் தெளிவு. திருப்பதியில் கோவிந்தராசர் சந்நிதியிலும், பெரிய ரகுநாதன் சந்நிதியிலும் அமைக்கப்பட்டுள்ள திருவுருவங்களும் ஞானமுத்திரை யுடையவைகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

திருமலையில், இராமானுசர் கோவிலுக்குத் திருவிளக்கும் திருமாலையும் வைணவர்கள் தருமமாகக் கொடுத்து வரவேண்டுமென்று வீரநரசிம்மயாதவராயன் காலத்தில் கி.பி.1226-இல் ஏற்பாடு செய்திருந்ததாகக் கீழ்வரும் கல்வெட்டு அறிவிக்கின்றது.

''திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ வீர நரஸிம்மயாதவராயர்க்கு யாண்டு 15-வது விக்ரம ஸம்வத்ஸரத்து ஆவணி மாஸ முதல் எம்பெருமானார் கோயில் திருவிளக்கும் திருமாலையும் வைஷ்ணவர்கள் தர்மம்'' (T. T. Ins. Vol. I No. 89)

இதைத் தவிர,

'' ஆன ஸௌம்ய—
தொருநாள்—
இராமாநுஜ—
ன் எம்பெருமான்— ''

என்றொரு சிதைந்த கல்வெட்டும் வேறுசில சிதைந்தனவும் இராமாநுஜரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இவை கி. பி. 1220-க்கு முற்பட்டவையாகவும் இருக்கலாம். எனவே இராமாநுசர் கோயில் கி.பி.1220-க்கு முன் இருந்ததென்பது பெறப்படும். அக்காலத்துக்கு எத்துணை ஆண்டுகள் முற்பட்ட தென்பதைத் திட்டமாய்க் கூறுவதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை. கோயில் கட்டிப் பல ஆண்டுகள் கழித்தே மேற்கூறிய தருமம் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

(தொடரும்)

# நம்பிக்கையின் அவசியம்

'' வனமாலீ கதிசார்ங்கீ சங்கீ சக்ரீ நந்தகீ
ஸ்ரீமான் நாராயணோ விஷ்ணுர்
வாஸு தேவோऽபிரக்ஷது''

'வன மாலையைத்தரித்தவரும், கதை, சார்ங்கம், சங்கு, சக்ரம், நந்தகம் என்னும் வாள் உடையவரும், ஸ்ரீ லக்ஷ்மி தேவியோடு கூடிய வருமான ஸ்ரீமந் நாராயணன், விஷ்ணு, வாஸு தேவர் என்று கூறப்படுபவர் காப் பாற்றுவாராக' என்கிறது விஷ்ணு ஸஹஸ்ர நாமம். பூவோடு சேர்ந்து நாரும் மணத்ததாம் என்பார்கள். திருமலையால் பகவானுக்கு ஏற்றமா அல்லது பகவானுடைய வாசஸ்தல மாக ஆனதால் திருமலைக்கு ஏற்றமா என்பதை நாம விளக்கி கூற வேண்டி யது இல்லை. உதிரிப் பூக்களாக இருந் தால் பூவிற்கு அவ்வளவு ஏற்றம் இல்லை. பெரிய மாலையாக கட்டி ஆண்டவனுக்கு அணிவித்தால் அதன் அழகே அழகு. உதிரிப்பூக்களை நார் இல்லாமல் கட்ட முடியுமா? அதே சமயம் வெறும் நார் மட்டும் இருந் தால் போதுமா? பூதானே முக்யம்? பூவும், நாரும் சேர்த்துத் தொடுத்துச் சமர்ப்பித்தால்தான் பகவானுக்கும் மாலை அழகைத் தருகிறது.

ஊஞ்சல் சேவை-ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில்-திருப்பதி.

பூ என்பது பகவானின் ஸ்தோத்ரங் கள், நார் என்பது நம் மனது. பூவை யும் நாரையும் சேர்த்து மாலையாகக் கட்டி பகவானுக்கு சமர்ப்பித்தால் அப்போது ஏற்படும் அழகு, நமக்கு பகவான் அருளும் அநுக்ரஹமாகும். நம்பிக்கையுடன் செய்தால் எதையும் கட்டாயம் அளிப்பான் பகவான்

சாதாரணமாக பெரியவர்கள் கூறு வதுண்டு, ''உன் சிநேகிதனைக் கூறு. உன் குணத்தைக் கண்டு பிடித்து விடு கிறேன்'' என்று. அவனுடைய சிநேகி தன் நல்லவனாக இருக்கும் பட்சத்தில் இவனையும் நல்லவனாகவே எடைபோடு வார்கள். நம்பிக்கையுடன் செயல் பட்டால்தான் எந்தக் கார்யமுமே வெற்றியடைகிறது.

மந்திர மஹத்வாதி காலத்தில் விசு வாமித்ர சரித்திரத்தில் உள்ள ஒரு கதையைப் பார்ப்போம்.

ஒரு நாள் பார்வதியும் பரமேச்வர னும் ஆகாய மார்க்கமாக எங்கேயோ சென்று கொண்டிருந்தனர். பார்வதி தேவி பூமியை நோக்கினாள். பூமியில் கங்கா ஸ்நாநம் செய்த பல புண்ணிய வான்கள் சென்று கொண்டிருந்தனர். அதைப் பார்த்து பார்வதி தேவி, ''ஸ்வாமி, இவ்வளவு ஜனங்கள் கங்கா ஸ்நாநம் செய்துவிட்டு செல்கிறார் களே? கங்கா ஸ்நாநம் செய்தவர்கள் புண்ணியத்தோடு மோக்ஷாதிபதிகள் ஆகிறார்கள் அல்லவா? இத்தனை பேருக்குமா மோக்ஷம்?'' என்று கேட் டாள். அப்போது பரமேஸ்வரன் கூறுகிறார். ''தேவி இதை நீ கட் டாயம் தெரிந்து கொள்ள வேண் டும்' என்று கூறி பூவுலகில் தேவி யுடன் இறங்கினார்.

பார்வதி தேவி ஓர் ஏழை ஸ்த்ரீ யாகவும், தான் ஒரு காக்காய் வலிப்புக் காரனாகவும் மாறி, அவள் மடியில் படுத்துக் கொண்டு மிகமிக அவஸ்தை படுவது போல அபிநயக்கிறான். அந்த ஏழை ஸ்த்ரீயோ ஜனங்களை நோக்கி, ''ஐயா உங்களில் பாப மற்றவர்கள் என் புருஷனைத் தொட்டால் இவ்வலி நீங்கி நன்றாக ஆகிவிடுவார். யாராவது தயதுசெய்து என் கணவரை தொட்டு உதவி பண்ணுங்களேன்'' என்று கதறுகிறாள். ஆனால் ஸ்நாநம் செய்து விட்டு வந்த ஒருவரும் அவனைத் தொடவில்லை. எல்லோரும் வேடிக் கைப் பார்க்கிறார்கள். தான் கங்கா ஸ்நாநம் செய்ததையோ, அதனால் பாவங்கள் தொலைந்து போயிருக்கும் என்றோ யாரும் நினைக்கவில்லை. பிறகு ஒருவன் வேசியின் வீட்டிலிருநது வெளியே வந்து இந்த வேடிக்கையைப் பார்த்துவிட்டு, கங்கையில் போய் ஸ்நாநம் செய்துவிட்டு அநதக் காக்காய் வலிப்புக்காரனைத் தொடு கிறான். தொட்டவுடன் கஷ்டம் நீங்கி காக்காய் வலிப்புக்காரன் எழுந்து கொள்கிறான். இதைப் பார்வதி தேவிக்கு செய்து காட்டிய பரமேச் வரன் ''பார்த்தாயா தேவி! வேசியின் வீட்டிலிருந்து வந்தவன் மஹா பாவி ஆயினும் கங்கா ஸ்நாநத்தைப் பற்றி அவனுக்கு பூரண நம்பிக்கை இருக் கிறது. அதனால் அவன் செய்த உதவி யும் பலித்தது. எத்தனை பேர் ஸ்நாநம் செய்தாலும் நம்பிக்கை இருந்தவர் களுக்கே பலன் இருக்கிறது'' என்று கூறி தேவியுடன் ஆகாயத்தில் சென்றார்.

பகவானிடத்தில் நம்பிக்கையோடு 'உன் நினைவன்றி மற்றறியேன்' என்று தஞ்சம் புகுந்து விட்டால் நிச்சயம் காப்பாற்றுவான் என்பது திண்ணம்.



குமாரி. வி. வைதேகி, திருப்பதி.

# அனுமன் திகைத்தான்

அரக்கர் கோமகனால் அசோகவனத்தில் சிறை வைக்கப்பட்ட சீதாதேவி, இராமபிரானது பிரிவால் தன் கண்களினின்று பெருகிய துயரக் கண்ணீரால் நனைந்து வாடி வதங்கியதைக் கம்பர் கூறுமிடத்து,

''துப்பினுற் செய்த கையொடு கால்
பெற்ற துளிமஞ்சு
ஒப்பினுன் தனை நினைந்தோறும்
நெடுங்கண்களுகுத்த
அப்பினுனைத் தருந்துய ருயிர்ப்
புடை யாக்கை
வெப்பினுற் புலர்ந் தொரு நிலை
யுருதமென் துகிலாள்''.

என்று கூறுகிறார். இவ்வாறு கண்ணீரால் ஆடைகள் நனைவதும், அத்துன்பத்தில் உண்டான பெரு மூச்சாகிய வெப்பக் காற்றினால் அவ்வாடை உலர்வதையும் வெகு அழகாகக் கூறுகின்றார்.

இந்நிலையில் துயர் கொண்ட சீதையின்பால் அன்பு கொண்ட திரிசடை என்னும் அரக்கி தான் கண்ட கனவின் பலனைக் கூறி, அதனால் இலங்கை விரைவில் அழியும் என்று கூறுகிறாள்.

அப்போது துயில் கொண்டிருந்த அரக்கியர் எழுந்து அன்னை சீதா பிராட்டியைச் சூழ்ந்து நிற்கின்ற வேளையில் இராம தூதன் இலங்கை முழுதும் தேடியும் சீதாதேவியைக் காணது, இறுதியில் அசோகவனம் புகுநது, அவ்வனத்தினிடையே உள்ள 'சிம்சுபா' என்ற பெரிய மரத்தின் கிளையில் அமர்கிறான். பயங்கர ஆயுதம் தாங்கிய அரக்கியர் கூட்டம் ஒன்று திரண்டு நிற்பதைக் கண்டு, ஏன் இவர்கள் இவ்வாறு நிற்கினறனர்? என்பதைக் காண விரும்பி, சிம்சுபா மரத்திலிருந்து உற்று நோக்குமிடத்து, கரிய மேகக் கூட்டத்திடையே தோன்றும் மின்னலை ஒத்த அனனை சீதா பிராட்டியைக் காணகிறான்......கண்டதும்......



திரு. கே. எம். ஜெயராமகிருஷ்ணன்,
கொமாரலிங்கம்.

இவள் சீதாபிராட்டியார் தான் என்று தன்னுள் உணர்ந்து கொண்ட அவ்வீர மைந்தன் ஆடினன்! பாடினன்!!

எப்படி ?

''ஆடினன் பாடினன் ஆண்டு மீண்டும்
பாய்ந்து
ஒன்ன னுலாவினனுவகைத்
தேனுண்டான்''

என்கிறது கம்பராமாயணம்.

'மாசுண்ட மணியனுள் வயங்கு வெங்கதிர் தேசுண்ட திங்களு மென்மை தேய்ந்து'—அதாவது, மாசு படிந்த மணிபோல உடம்பு புழுதி படிந திருக்க, சூரியன் முன் விளங்கும் சந்திரன் போல் ஒளி மழுங்கி அமர்ந்த சீதையைக் காண்கிறுன் அஞ்சனு புத்திரன்.

சீதையின் நிலை கண்டு, கற்பின் சிறப்பை வியந்து ஆனந்த பாஷ்பம் பொழிகிறுன்.

அவ்வேளையில், இராவணன் அசோகவனம் புகுந்து தனது கருத்திற்கு இசையும்படி, சீதாதேவியை வேண்ட, சீதையின் கற்புக் கனல் முன் நிற்க ஆற்றுதவனுய், ''சீதா பிராட்டியை எப்படியாவது வசப்படுத்த வேண்டும்'' என்று அரக்கியருக்குக் கட்டளையிட்டுவிட்டு அசோகவனம் விட்டு அகல்கிறுன்.

அப்போது அரக்கியர்கள் பலவாறு சீதாதேவியை நிந்தித்து மனம் நோகச் செய்கின்றனர். இந்நிலை தாளாத அன்னையார், 'இனி உயிர் வாழ்தலை விட இறப்பதே மேல்' என எண்ணம் கொண்டவராய் குருக்கத்திப் புதரினை அடைகின்றனர். அப்போது அனுமன், அரக்கியரைத் தூக்கத்தில் ஆழ்த்த மந்திரம் ஒன்று செபித்து, பின் சீதாபிராட்டி முன் தோன்றி,

'அண்டர் நாயக னெரு தூதன்
யானெனுத்
தொண்டை வாய் மயிலனைத்
தொழுது தோன்றினுன்!'

தன்னைப்பற்றி ஐயுற வேண்டாம் எனக் கூறுகிறுன. தான் அங்கு வந்த வரலாற்றைச் சீதா தேவிக்குத் தெளிவாகக் கூறுகிறுன்.

அனுமனின் வார்த்தைகளைக் கேட்ட சீதாதேவி மகிழ்ந்து அனுமனை நோக்கி, 'ஐய சொலையன் மேனி யெப்படிக் கறிதி' என்கிருள். அப்போது அனுமன்,

''படி யெடுத் துரைத்துக் காட்டும்
படித்தன்று படிவம் பண்பின்
முடிவுள வுவம மெல்லா மிலக்கண
மொழியு முனைர்த்
துடியிடை யடையாளத்தின்
றொடரவை தொடர்தி யென்று
அடி முதன் முடியின் காறு மறிவுற
வநுமன் சொல்வான்''

இராமபிரானது மேனி அழகை, அங்கம் அங்கமாக, அடி முதல், முடி வரை விவரித்து கூறுவதைக் காண் போம்.

இராமபிரானது திருவடியைப் பற்றிக் கூறும்போது செந்தாமரை மலர்களுக்கு ஒப்பிடலாம் எனில், செந்தாமரை ஐயனுடைய பாதங் களுக்கு இணையாக மாட்டா என்ப தால்—ஐயனுடைய பாதங்களை, 'பாய்திரைப் பவளத்திற்கும், குவளைக் கும்' ஒப்புமையாகக் கூறுகின்றான்.

திருவடி விரல்களுக்கு ஒப்பாக இளஞ் சூரிய கிரணங்களையும், திருவடி யின் நகங்களுக்கு ஒப்புவமையாக பத்துப் பூர்ண சந்திரர்களின் இயல் பிலே திரண்ட வடிவுள்ள பத்து வைரக் கற்கள் இருந்தால் அவை திரு வடிகளுக்கு ஒப்பாகும் என்றும், புற வடியின் சிறப்போ எனில் நூலை மாறு கொண்டு இருந்ததெனவும், கணைக் கால்கள் அம்பராத்தூணிகளுக்கு உவமையாகவும் விளங்கின என்று கூறுகிறான்.

பின்னர் தொடைகள் கருட பக வானது பிடரியை ஒத்திருந்தன வென்றும்; திருவுந்தியின் சிறப்பு மகிழம்பூவைப் போன்று இருநதது என்றும்; திருமார்பானது—'திருமகள்' விரும்பும் இடமாக அமைந்தது என வும்; திருக்கைகள் ஐராவதத்தின் துதிக்கைகளைப் போல இருந்தன என்றும் கூறுகிறான். திருத்தோள்கள் மகாமேரு மலைகளைப் போல உயர்ந்து விளங்கின என்கிறான்.

கழுத்தானது இளைய பாக்கு மரம் போலவும், 'பாஞ்ஜ ஜன்யம்' என்ற சங்கினைப் போன்று விளங்கியது என வும் புகல்கின்றான்.

மேலும் திருமுகமானது தாமரை மலர் போன்று விளங்கியது என திருமுகத்தை தாமரை மலருக்கும்; வாயினைப் பவளத்துக்கும், தாமரை மலருக்கும் ஒப்புமைப்படுத் தலாம் என்றால் அவை இராம பிரா னின் வாயில் சுரக்கும் 'இன் சொல்' என்ற பேரமுதத்தினைச் சுரக்க ஆற்று தனவாய் நாணுகின்றன என்று கூறு கிறான். நெற்றியினை அஷ்டமி சந்திர னின் பாதிச் சந்திரனுக்கும், நாசியினை இந்திர நீலத்திலிருந்து உண்டான மரகதச் சுடர் ஒளிக்கும் ஒப்புமை காட்டுகிறான வாயு மைந்தன்.

இந்நிலையில் எஞ்சிய பகுதியாக விளங்கும் பல்லினை விளக்க முற்பட்ட இராம தூதன்—முதலில் இராம பிரானது பற்களின் ஒளிக்கு முத்துக் களை உவமையாகக் கூறுகிறான். அது சரியாகப்படவில்லை. எனவே பூர்ண சந்திரனது துணடங்களின் வரிசைக்கு ஒப்பிடலாமென என்னுகிறான். அது வும் சரியாகப் படவில்லை. பின் எதற்கு ஒப்புமைப்படுத்துவது என எண்ணிய அந்த உத்தமன் தேவாமிர்தமாகிய பொருளினுடைய துளிகளின் கூட்ட மாகஇருக்கலாம் என்று எணணுகிறான். அதுவும் ஒப்பாகுமா? திகைக்கிறான்! விதையிலிருந்து தோன்றிய முளைகளுக் கும், சத்தியமாகிய மரத்தில் தோன் றிய அரும்புகளுக்கும், முல்லையரும்பு களுக்கும், மயிலின் இறகின் அடிப் பகுதிக்கும் ஒப்புமையாக அமை யுமோ எனப் பலவாறு சிந்திக்கிறான்.

கடைசியில் ஒன்றும் தோன்றா நிலை யில், மிகவும் திகைப்பு எய்தி,

முத்தங் கொல்லோ முழு நிலவின்
முறியின்றிறனோ முறைய முதச
சொத்தின் றுளளி வெள்ளி யினர்
தொடுத்த கொல்லோ துறை
யறத்தின்
வித்து முளைத்த வங்குரமகொல்
வேறே சில கொன மெய்ம முகிழ்தத
தொத்தின் றெகை கொல்
யாதென்று பல்லுக்கு உவமை
சொல்லுகேன்

என்று பல்லுக்குரிய ஒப்புமைப் பொருள் கூற வகையற்ற நிலையில் தனது திகைப்பை அன்னை சீதா பிராட்டிக்கு அறிவிக்கிறான். அண்ண லின் சௌந்தர்யத்தை—அழகை—தன் னால் பூர்ணமாக ஒப்புமை காட்டி கூற வியலாமல் 'அனுமன் திகைத்தான்'.

அனுமனின் திகைப்பை உணாந் தாள் சீதாதேவி! தன் உள்ளமெலாம் அன்பால் நிறைவுற்ற நிலையில் தன அடி தொழுது நிற்கும் அஞ்சனை மைந்தனை - வாயு குமரனை - வீரத்தின் திருவுருவை-தியாகச் செம்மலை ஆசி கூறி 'வாழிய பனைத்தோள் வீர!' என்று வாழ்த்துகிறாள் - அனுமனின் திகைப்பு நீங்கிட. ★



திருமலையில் வசந்தோற்சவத்தின்போது சீதா, ராம, லக்ஷ்மண, ஆஞ்சநேய சுவாமிகளின் அபிஷேகக் காட்சி.

# பரசுராமேஸ்வர ஆலயம்-குடிமல்லம்

குடிமல்லம் கிராமம், சித்தூர் மாவட்டம் காளஹஸ்தி வட்டத்தில் உள்ளது. ரேணிகுண்டா புகைவண்டி நிலையத்திலிருந்து பேருந்தில் பாபா நாயுடு பேட்டைக்கு 10. கி. மீ. சென்று, சுமார் 4 கி. மீ. கிழக்கே நடந்து சென்றால் இந்தக் கிராமத்தை அடையலாம். இதனை யொட்டி 'சீத காலுவ' என்னும் சிற்றாறு பாய்கின்றது. இந்தச் சிற்றாறு 'சுவர்ண முகி' யோடு கலக்கின்றது.

இக்கிராமம் ஓர் சரித்திர முக்கியத்துவம வாய்ந்ததாக உள்ளது. ஏனெனில் இங்கு மிகவும் பழமையான ஆலயமொன்று உள்ளது. இதனையே, 'பரசுராமேஸ்வர ஆலயம்' என்று அழைத்து வருகின்றனர். இதன் சிறப்பு கருப்ப கிரஹத்தில் உள்ள சிவலிங்கத்தினைச் சார்ந்தது ஆகும். ஆராய்ச்சியாளர்களின் கருத்துப்படி இச்சிவலிங்கமே இதுவரை கண்டு பிடிக்கப்பட்டுள்ள அனைத்துச் சிவ லிங்கங்களிலும் மிகப் பழமையானது. எனவே இது கி. மு. இரண்டு அல்லது முதல் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இந்த இலிங்கத்தினை "இலிங்கோத் பவ மூர்த்தி" என்றும் சிலர் அழைக் கின்றனர். சமீபத்தில் உஜ்ஜயினியில் கிடைத்த செப்பு நாணயங்களில் இந்தக் குடிமல்லம் இலிங்கத்தினைப் போன்ற உருவம் அச்சிடப்பட்டுள்ள தாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

வரலாற்று ஆசிரியர்களுக்கிடையே இவ்வூரின் பெயரைக் குறித்துப் பல கருத்துக்கள் உள்ளன. இந்த ஆலயத்தில் இருபத்தாறு கல்வெட்டுக்கள் உள்ளன. இக் கல்வெட்டுக்கள் பல்லவர்கள், கங்க பல்லவர்கள், பாணர்கள், சோழர்கள், விஜயநகரப் பேரரசர்கள் ஆகியோர் ஆட்சிக் காலத்தைச் சார்ந்தவை. இந்தக் கல்வெட்டுக்களில் ஒன்றனுள்ளும் தற்போதுள்ள "குடிமல்லம்" என்னும் பெயர் குறிப்பிடப்படவில்லை. ஆனால், 'ஸ்ரீவீர பெரிம்பேடு' என்னும் பெயர் காணப்படுகின்றது. இதனையே 'விப்ர பீடம்' என்றும் கூறு கின்றனர்.

முன் பக்கத்திலுள்ள அரை மஹா மண்டபங்களைவிட கருப்பகிருஹம் பள்ளத்தில் அமைந்திருப்பதனால் இந்த ஊரினுக்குக் 'குடிபள்ளம்' என்ற பெயர் வந்திருக்கக்கூடும் என்பது ஒரு சிலர் கருத்து. இப்பெயரே நாளடைவில் குடிமல்லமாக மாறியிருக்கக் கூடும் என்று ஒரு சிலர் கருதுகின்றனர் வேறு சிலர் இலிங்கத்தின் மீது செதுக் கப்பட்டுள்ள சிவபெருமான் வேட்டைக்காரன் (மல்லன்) உருவத்தி லிருப்பதால் இந்தக் கிராமத்திற்குக் 'குடிமல்லம்' என்ற பெயர் தோன்றி யிருகக வேண்டும் என்று கருது கின்றனர்.

கலவெட்டுக்களில் கோயிலின் பெயர் 'ஸ்ரீ பரசுராமேஸ்வராலயம்' என்று குறிககபபட்டுள்ளது. இலிங கத்திலுள்ள சிவபெருமான் உருவத்தின் இடது தோளில 'பரசு' (கோடாரி) இருப்பதனால் இந்தக கடவுளை 'பரசுராமேஸ்வரர்' என்று அழைப்பதில் பொருள் உள்ளது.

இங்குள்ள கல்வெட்டுக்கள் இந்தக் கோயிலை முதன் முதலில் யார் கட்டினர், எப்போது கட்டினர், முதல் பெயர் எப்படி யிடப்பட்டது முதலிய குறிப்புக்களைத் தரவில்லை.

1973-ல் ஐ. கே. சர்மா என்ற அகழ்வாராய்ச்சியாளரின் கண்டுபிடிப்

---

திரு. டி. கே. கே. சௌத்ரி,
திருப்பதி.

---

பின் பயனாக இந்த ஆலயம், பழைய எலும்புகள் நிறைந்த ஒரு மண்மேட்டின் கீழ் அகழ்ந்து கிடந்தது கண்டு பிடிக்கப்பட்டது. இங்குக் கிடைத்த கருப்பு, சிவப்பு வர்ணமுள்ள மண் பாத்திரங்கள் கி. மு. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை யாகும். மேலும் இங்கு ஆந்திர சாத வாஹனர்கள் காலத்தைய பாத்திரங் களின் ஓடுகளும், 42'' × 21'' × 6'' அளவு கொண்ட செங்கற்களும் வெளிப்பட்டன.

கருபபகிரஹத்திலுள்ள சிவலிங்கம் 'ப்ளாக் பஸால்ட்' என்னும் கல்லில் செதுககப்பட்டுள்ளது. இந்த வித மான கறகள் இந்தச் சுற்று வட்டாரங்களில் எங்குமே காணப்படுவதில்லை. இநத இலிங்கம் 5 அடி உயரமும், 1 அடி கனமும், 7 கோணங்களையும் பெற்று, இதனை வட்டமான பீடத்தில் பொருத்தியுள்ளனர். இந்தப் பீடத்தைச்சுற்றி 1.35 மீட்டர் அகலமுள்ள சதுர வடிவான கற்சுவர் ஒன்று உள்ளது.

இலிங்கத்திலுள்ள உருவமும், உருவத்தின் உடற் கூறுகளும் அழகாக செதுக்கப்பட்டுள்ளன. கடவுள் இரண்டு கண்களை உடையவராகவும், மூக்கின் நுனியைப் பார்த்துக் கொண்டிருப்பவராகவும் அமைக்கப்பட்டுள்ளார். இடது கையில் 'சுரைக்காயைப்' போன்ற சிறிய பாத்திரம் உள்ளது. இது ஒரு வேளை 'மது பாத்திரமாக' இருக்கலாம். வலது கையால் இறந்துபோன ஆட்டின் பின்னங்காலைப் பிடித்துக் கொண்டு இருக்கிறார். கைகளில் வளையங்கள் உள்ளன. தலைமயிர் சுருள் சுருளாக சுருண்டு கூடையைப் பின்னினாற் போன்றுள்ளது. காதுகளிலும், கழுத்துகளிலும் ஆபரணங் செதுக்கப்பட்டுள்ளன. கடவுளுக்கு ஒழுங்காக ஆடை செதுக்கப்பட்டிருக்கின்றது. ஓர் அரக்கன் தோளின் மீது இறைவன் நின்று கொண்டிருப்பது போன்று செதுக்கப்பட்டுள்ளது. இவ்வாலய அமைப்பு சாதாரணமானதன்று. எல்லாக் கோயில்களிலும் சாதாரணமாக, கடவுளுக்கு நேரே சிம்ம வழியிருந்து, சிம்ம வழிக்கும் கடவுளுக்கும் இடையில் துவஜஸ் தம்பம் இருந்து, சிம்ம வழிக்கு நேரே கருப்பகிரஹ நுழை வாசல் இருக்கும். ஆனால் இந்தக் கோயிலில் மேற்கே சிம்ம வழியும், தெற்கே கோயில் நுழைவாசலும், கடவுளுக்கு நேராக கிழக்கே துவஜஸ்தம்பமும் உள்ளது.



பஞ்சாங்க ஸ்ரவணம்
உகாதி ஆஸ்தானம் – திருமலை.

கர்ப்பகுடி "கஜபிருஷ்ட ஆகாரம்" கொண்டு 12 அடி நீளமும், 10 அடி அகலமும் உள்ளதாக அமைந்துள்ளது. இதற்கு முன்னுள்ள மண்டபம் 10 அடி அளவுகொண்ட சதுர வடிவில கட்டப்பட்டுள்ளது. கர்ப்பகுடி அறை மண்டபம் பல்லவர் காலத்தது. மஹா மண்டபத்தின் சுற்று வளையம் சோழர் காலத்தது. இச்சுற்று வளையத்திற்கு முன் ஒரு செவ்வக வடிவுள்ள பெரிய மண்டபம் உள்ளது.

ஆலயத்தினுள் வடமேற்கு திசையில் தேவி ஆலயமும், கார்த்திகேயன் ஆலயமும் கிழக்கு திசை நோக்கிய வாயில்களுடன் உள்ளன. இவவிரண்டு ஆலயங்களுக்கும் எதிரே மேற்கு திசை நோக்கிய வாயிலுடன் சூரியன் ஆலயம் உள்ளது. இவை விஜயநகர ஆட்சிக் காலத்தவையாகும். தென்னிந்தியாவில் 'குடிமல்லம்' கோயிலைப்போன்ற அமைப்புள்ளவை சில உள்ளன: அவை மகாபலிபுரத்தில் உள்ள 'நகுல சகாதேவ இரதம்', ஜொன்னவாடாவில் உள்ள 'சிவாலயம்' போன்றவையாகும்.



# பழமொழியும் கம்பராமாயணமும்

தமிழ்மொழி பல்லாயிரம் பழமொழிகளைப் பெற்றிருக்கின்ற உயர் தனிச் செம்மொழியாகும். அணு முதல் அண்டம் ஈறாகவுள்ள ஒவ்வொன்றைப் பற்றியும் தமிழில் எத்தனையோ பழமொழிகள் உண்டு. இப் பழமொழிகள் யாவும் பழுத்த பட்டறிவின் (அனுபவத்தின்) அடிப்படையில் தோன்றிய அறவுரையாகவும் சிந்தனையின் திரண்ட சாரமாகவும் விளங்கி மக்களுக்கு எப்போதும் மெய்யறிவு கொளுத்திய வண்ணம் இருக்கின்றன.

## பழமொழியின் வரையறை:

கி. மு. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தொல்காப்பியர் பழமொழிக்கு மிகச் சிறந்த முறையில் வரையறை வகுத்துள்ளார். நுட்பம், சுருக்கம், விளக்கம், எளிமை ஆகிய நான்கு இலக்கணமும் வாய்க்கப் பெற்று ஒரு குறிப்பிட்ட பொருளைக் காரணத்துடன் உணர்த்த வல்லது பழமொழி என்பது தொல்காப்பியர் பழமொழிக்கு வகுத்த வரையறையாகும்.

"நுண்மையும் சுருக்கமும ஒளியுடைமையும்
எண்மையும் என்றிவை விளங்கத் தோனறிக்
குறித்த பொருளை முடிதததற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப"

(தொல்காப்பியம்: பொருளதிகாரம்)

தொலகாப்பியர் பழமொழிக்கு வகுத்த வரையறையே நமக்குக கிடைத்த பழைய வரையறையாகும். பிற நாட்டறிஞர்கள் பழமொழிக்கு வகுத்த சில குறிப்பிடத்தக்க வரையறைகளும் இவண சிநதிக்கத் தக்கன. ஸ்பெயின் நாட்டு அறிஞர் செர்வாண்டீஸ் (Cervantes) "பழமொழி என்பது நீண்ட அனுபவத்தின் அடிப்படையில் அமைந்த சிறு வாக்கியம்" என்று வரையறை வகுத்துள்ளார். (A proverb is a short sentence based on long experience) 'பழமொழி பலருடைய அறிவு ஒருவருடைய சாதுரியம்' (The wisdom of many and the wit of one) என்று ஜான்ரஸ்ஸல் (Lord John Russel) வரையறுத்துள்ளார். 'கருத்து, சுருக்கம், கூர்மை முதலிய கூறுகளைக் கொண்டதே நல்ல பழமொழி' என்று டிரையன் எட்வர்ட்ஸ் (Tryon Edwards) கூறியுள்ளார். (Sense, brevity and point are the elements of a good proverbs) 'அறிவின் சாரமே பழமொழி என்று வரையறுத்தார் ஜோபர்ட் (Joubert) (Proverbs may be said to be the abridgements of wisdom.)

பேராசிரியர். வ. பெருமாள்,
எம்.ஏ., பி.டி., எம் ஆர். ஏ.எஸ்.,
உரிகம்.

பழமொழி நாட்டு மக்கள் அனைவர்க்கும் உரிய பொது இலக்கியமாகும். ஒரு நாட்டின் வரலாறு பண்பாடு, நாகரீகம், சமயம் கலை, அறிவு, பழக்க வழக்கம் முதலிய எல்லாவற்றையும் உள்ளங்கை நெல்லிக் கனி போலத் தெளிவாக உணர்த்தக்கூடிய ஒரே இலக்கியம் பழமொழியாகும். திறவுகோலைக் கொண்டு பணப்பெட்டியைத் திறப்பது போலப் பழமொழியைக் கொண்டு ஒரு நாட்டின் பண்பாட்டுப் பெட்டகத்தைத் திறந்து விடலாம். தமிழ்ப் பழமொழி தமிழகத்தைப் பிரதிபலிக்கின்ற கண்ணுடி போன்று அமைந்திருக்கின்றது. தமிழ்ப் பழமொழி துணைக்கொண்டு கம்பராமாயணத்தை ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

## கம்பர்:

கல்வியில் கரைகண்டவர் கம்பர். கல்வியைப்பற்றி அவர் பாடிய பாடல்கள் மிகப்பல. ஒவ்வொருவரும் கல்வியிற் சிறந்தவராகத் திகழ்தல் வேண்டும் என்பதே கம்பர் விருப்பம். அதுவே அவர் கனவு. அவர் கண்ட கோசல நாட்டில் மகளிர் கல்வியில் மேம்பட்டு விளங்கினுர்கள் என்பதை அவர் பாடல் வாயிலாக அறியலாம்.

"பெருந்த டம்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அனறி விளைவன யாவையே"

கம்பர் கண்ட நாட்டில் வாழ்ந்த மக்கள் அறிஞர் அறிவற்றவர் என்னும் வேறுபாடு இல்லாமல் அனைவரும் செல்வத்துள் செல்வமாகிய செவிச் செல்வத்தில் சிறந்து விளங்கினுர்கள். 'ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்' என்பதும், 'மருந்தினும் இனிய கேள்வி செவியுற மாந்துவாரும்' என்பதும் கம்பர் வாக்கு. கல்வி வல்லார், கல்வியற்றுர் என்னும் பாகுபாடின்றி மக்கள் எல்லோரும் கல்வியிற் சிறந்தும் மேம்பட்டும் விளங்கினுர்கள்.

"கல்லாது நிற்பார் பிறர்இன்மையின கல்விமுற்ற
வல்லாரும இல்லை அவைவல்லர்அல் லாரும்இல்லை."

என்பது கம்பர் பாடல். கம்பர் கல்வித் துறையில் நுண்மாண் நுழைபுலம் பெற்றவராகத் திகழ்ந்ததாலும், கல்வியைப் பற்றிப்பல இனிய பாடல்களை மிகச் சுவையான முறையில் பாடியிருத்தலாலும் 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்று மக்கள் போற்றுவாராயினர். அதுவே பழமொழியாக நிலைத்துவிட்டது.

இவ்வுண்மையை உணர்ந்தே கல்வியையும் கம்பரையும் இணைத்துக,

"கல்வி சிறந்த தமிழ்நாடு-புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு"




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

என்று பாரதியார் தெளிவாகப் பாடியுள்ளார்.

கம்பர் கவிதை இயற்றுவதில் வல்லவர். அவர் யாத்த கவிதைகள் பணபினுலும் எண்ணிக்கையாலும் உயர்ந்து விளங்குகின்றன.

'' புவியினுக்க கணியாய் ஆன்ற பொருள்
தந்து புலத்திற்ருகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை
நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்
ெறுழுக்கமும் தழுவிச் சான்ருேர்
கவியெனக் கிடநத கோதா விரியினை
வீரர் கண்டார்.''

என்று கமபர் கவிதைக்கு வரையறுத்த சீரிய இலக்கணத்திற்கு ஏற்ப அவர் கவிதைகள் அமைந்திருக்கின்றன. கம்பர் கவிதையைச் சுவைத்த மக்களிடையே,

'கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்', 'கம்பர் வீட்டுள் ஒரு புன் கட்டுத் தறியும் கவி செய்யும்', 'கவிச் சக்ரவர்த்தி கம்பர்', 'கம்பரிடம் பெருமை உண்டு' முதலியன பழமொழிகள் தோன்றின. 'கம்பர் ஆயிரம் பொன கொடுத்தால் தான் பாடுவார்' என்றும், 'கம்பரது ஒவ்வொரு பாடலும் ஆயிரம் பொன் பெறும்' எனறும செவி வழிச் செய்தி வழங்கி வருகினறது. 'கம்பர் பொன்னுக்குப் பாடி', 'காசுக்குக் கம்பர்' என்பவை பழமொழிகள். கம்பர் கவிதையைக் கேட்கும் தோறும், படிக்கும் தோறும் கற்ருேர் உள்ளம் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிவிடும். இவ்வுணமையை உணர்த்தக் கீழ்க்கண்ட பாடல் ஒன்றே சாலும்.

'' இம்பர் நாட்டில் செல்வமெல்லாம்
எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டில் கறபகககா ஓங்கி
நிழல் இருநதாலும்
செய்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதை யிற்போல் கற்
ருேர்க்கு இதயம் களியாதே.''

திருமணம் செல்வக் கேசவராய முதலியார் 'தமிழிற்குக் கதியாவார் இருவர். ககரத்தைக் கம்பராகவும், திகரத்தைத் திருவள்ளுவராகவும் கொள்ளுக' என்று எழுதியுள்ளார். சந்த நயம் தோன்ற 'விருத்தப்பா பாடுவதில் கம்பர் தலையாயவர். இவ்வுண்மையை உணர்த்தவே, 'விருத்தம் என்னும் ஒண்பாவில் உயர் கம்பன்', 'ஒண்பா என்னும் உயர் விருத்தத்தில் கம்பன்' என்னும் பழமொழிகள் தோன்றின. கம்பர் கவிதை ஒவ்வொன்றும் வெறும் செய்யுளாக மட்டும் அமையாமல் எழுத்தோவியமாகத் திகழ்வதால் அதைக் 'கம்ப சித்திரம்' என்று மக்கள் புகழ்வாராயினர். அப்புகழுரையே பழமொழியாகிவிட்டது. சில சொற்களில் பல கருத்துக்களை அடக்கித் திட்பமாகவும் நுட்பமாகவும் அமையச் செய்து பளிங்கு போல் விளக்கும் திறனைக் கம்பர் பெற்றிருந்ததால் அவர் கவிதையைக் 'கம்ப சூத்திரம்' என்று மக்கள் பாராட்டினர்கள். அப்பாராட்டுரையே பழமொழியாகக் காட்சியளிக்கின்றது. அப்பழமொழிகள் யாவும் கம்பரின் அருமை பெருமையை உணர்த்திய வண்ணம் இருக்கின்றன.

## இராமாயணத்தின் தொன்மை:

கம்பர் தமிழில் இராமாயணம் எழுதுவதற்கு முன்னரே இராமாயணத்தைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தார்கள் என்பதற்குச் சான்று உண்டு. கம்பர் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்.

இராமன் ஆலமரத்தடியில் மறை ஆராய்ந்த போது பறவையின் ஒலி அடங்கியிருந்தது போலத் திருமணம் நடைபெற்ற பின்னர் ஊரில் அலர் ஒலி அடங்கிற்று என்னும் பொருள் படக் கி. மு. முதல் நூற்றுண்டைச் சேர்ந்த மதுரைத் தமிழ்க் கூத்தனுர் கடுவன் மள்ளனுர் தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

> 'வதுவை கூடிய பின்றைப் புதுவது
> பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
> கானலம் பெருந்துறைக் கழனி
> மாநீர்ப்
> பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
> விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்
> வென்வேற் கவுரியர் தொன்முது
> கோடி
> முழங்கிடும் பௌவம் இரங்கும்
> முன்றுறை
> வெல்போர் இராமன் அருமறைக்
> கவித்த
> பல்வீழ் ஆலம் போல
> ஒலியவிந் தன்றிவ் அழுங்கல் ஊரே!

(அகநானூறு: 70.)

கி. மு. முதல் நூற்றுண்டில் வாழ்ந்த சங்கப் புலவர் ஊன்பொதி பசுங்குடையார் தாம் இயற்றிய பாடலில் (புறநானூறு 378) இராமாயண நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார். கிணைப்பொருநன் ஒருவன் தன் சுற்றத்தாருடன் ஒரு வள்ளலை அணுகினுன். அவ்வள்ளல் பல்வேறு ஒண்கலன்களை அவர்களுக்கு வழங்கினுன். இராவணன் எடுத்துச் சென்ற சீதை தான் சென்ற வழியை இராமன் அறியும் பொருட்டுக் கீழே போட்ட அணிகலன்களைக் குரங்குகள் எடுத்து விரலில் அணிய வேண்டிய மோதிரத்தைக் காதிலும் காதில் அணிய வேண்டிய குழையை விரலிலும், இடையில் அணிய வேண்டிய மேகலையைக் கழுத்திலும், கழுத்தில் அணியத்தக்க மாலையை இடையிலும் அணிந்து கொண்டதைப் போலக் கிணைப்பொருநன் சுற்றத்தார் வள்ளல் வழங்கிய அணிகலன்களை முறை தவறி அணிந்து கொண்டார்கள் என்று ஊன்பொதி பசுங்குடை யார் குறிப்பிட்டுள்ளார். இராமாயண நிகழ்ச்சியை அவர் உவமையாகக் காட்டியதிலிருந்து அவர் காலத்தில் பொதுமக்கள் இராமாயணத்தை நன்கு அறிந்திருந்தாகள் என்பதை அறியலாம். கி பி இரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த இளங்கோவடிகள் தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில் இராமாயணத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். கோவலன் இல்லாத பூம்புகார் நகரம் இராமன் இல்லாத அயோத்தி போல இருந்தது என்று கௌசிகன் வாயிலாக இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

> 'பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்
> அரசே தஞ்சமென்று அருங்கான்
> அடைந்த
> அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
> பெரும்பெயர் மூதூர் பெரும்பே
> துற்றதும்'

(சிலம்பு: மதுரைக்காண்டம்: புறஞ்சேரியிறுத்த காதை: 63-65.)

இராமன் தன் தந்தையின் ஏவலால் தன் மனைவி சீதையுடன் காட்டிற்குச் சென்று சீதையைக் காட்டில் பிரிந்து வாடினுன். இது அனைவரும் அறிந்ததே என்று இளங்கோவடிகள் கவுந்தி அடிகள் கூற்றுகக் கோவலனுக்குக் கூறுவது போலக் கூறியுள்ளார்.

> 'தாதை ஏவலின் மாதுடன் போகிக்
> காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
> வேத முதல்வற் பயந்தோன் என்பது
> நீயறிந் திலையோ நெடுமொழி
> அன்றோ''

(சிலம்பு: மதுரைக் காண்டம் ஊர் காண காதை 46-49.)

இராமன் காட்டிற்குச் சென்றதும், அங்கு அவன் சீதையைப் பறிகொடுத்து வருந்தியதும் நாடறிந்த செய்தி என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டிருப்பதால் அவர் காலத்தில் இராமாயணம் தமிழ் மக்களுக்கு நன்கு தெரிந்திருந்தது என்பது உறுதி தேவர் அசுரர் போர் பதினெட்டு ஆண்டும், இராமன் இராவணன்போர் பதினெட்டுத் திங்களும், பாண்டவர் துரியோதனன போர் பதினெட்டு நாளும, செங்குட்டுவன் கனக விசயன் போர் பதினெட்டு நாழிகையும் நடந்தன என்று இளங்கோ அடிகள் குறித்துள்ளார். (சிலப்பதிகாரம்· வஞ்சிக் காணடம்: நீர்ப்படைக் காதை 8-10). இச்சான்றுகள் யாவும் இராமாயணத்தின் தொன்மையைத் தெளிவுபடுத்தி உறுதிப்படுத்துகின்றன.

# ஆட்கொள்வான் வேங்கடவன்

வித்துவான். க. ஆ மார்ககபத்து-காஞ்சிபுரம்.

பூமக ளவளொடு புவிமக ளனுதினம் போற்றிடும் வேங்கடவன்
தேமரு மலரொடு திகழ்தரு வேங்கடத் திருமலை தனையென்றும்,
காமுறு மிமயவர் கருதிய பொழுதவர் கவலையெலாமேக
வாமன னெனவரு வானவர் கோனினி வந்தெமையாட் கொள்வான்.

கோணுறு வடிவொடு குரைகடலுலகினில் குலவிடு வேங்கடவன்,
சேணுறு வானவர் குறையிறந் தவனிரு திருவடி நாடினராய்
காணுறு பொழுதினில் கடிதவர்க் கருள்புரி காரணனாயந்நாள்
தூணுறுநர அரியாய் வருதூயவன் துணையிருந் தாட்கொள்வான்.

தானவ ரழிந்திட வானவர் வழிபட தாரணி தனிலன்றோர்
கூனுரு கொடியவள் குலமுறை பிறழ்ந்திட கூறிய வஞ்சனையால்,
கானுறை வாழ்வினைக் கனிவுடனே பெறு காவலன் வேங்கடவன்
ஊனமருடலொடு முழலுமிப் பிறவிநோ யொழிதர வாட்கொள்வான்.

இராவண னெனுமொரு ராக்கதனாலரு துயருறு வானவர்கள்
அராவணை துயில்கொளும பாற்கடலுற்றவனடி தொழுதனருயய,
மராமரந் துளைசெயவாளி கடாவிய மாமலை வேங்கடவன் ;
தராதல மிசைதன தடியவர்துயர் கெடத் தானிருந தாட்கொள்வான்.

வீடன னெனவரு மேவலன் சரணென மேவிய செயல்கண்டும்
ஏடவிழ் மலரவ ளேங்குறு நிலையினு மிடரவட் கிலையென்றே
நீடிய வடைக்கலம் நேர்பட வருளிய நீள்மலை வேங்கடவன்,
நாடிய வடியவர் நாநிலத் துய்வுற நாடொரு மாட்கொள்வான்.

ஆயர்கள் திருவெனு மாநிரை காத்தவரடி தொழு மாயவனாய்
மேயநல் லுரலொடு மேவிய நாளிரு மருதிடை யூர்ந்தேகி,
தீயவல் லரக்கரைத் தொலைத்தருள் புரிந்தஎம் திருமலை வேங்கடவன்
தூயநற் றமிழ்கொடு துதிசெயுமடியவர் துயர்துடைத் தாட்கொள்வான்.

தேனுக னெனுமொரு தீயவனழிபட தீங்கனியெய்திடுமோர்
மானுட வடிவுடை மாயனாய் வந்தருள் மாமலை வேங்கடவன்,
தேனினு மினியநந தீந்தமிழ் கொடுதுதி செய்திடு மடியாாகள்
வானினு முயரிய வாழ்வினை யவர்பெற மாநிலத் தாட்கொள்வான்.

பாண்டவர்க் கருள்புரி பாகனாய்வந் தவர் பாரதப் போரிடையே
தூண்டிடு துரகதத் தேரினைக் கடவிய தூதுவனா யந்நாள்
ஈண்டிய பகைவர்தம் சேனைகளழிபட வெழுந்தருள் வேங்கடவன்,
வேணடிடு மடியவர் வெவ்வினைகளைந்திட வேட்கையினாட் கொள்வான்.

மாமறை புகழ்தரு மாதவ வடிவுடை மறைவல அநதணனாய்
ஏமமொடுல கினிலேற்ற நறபுணணிய மீந்திடுவோன்முன்னார்
தூமமறை தொழுதிடு தூயனாய மகிழமுன் தோன்றிய வேங்கடவன்,
நாம மதுரைசெயும் நாநிலத் தவருய நாடியே யாட்கொளவான்.

நாளொரு பொழுதினும் நாடியமணமுறு நாள்மலர் கொடுதூவி
தாளுறு மடியவர் தாமுயவனுதினம் தாங்கிடு வேங்கடவன்,
கோளொடு வருபல கோடிய வினையெலாம் குலைந்திடவே செய்து,
மீளவும்வரு மொருமேவிய பிறவிநோய் வீழ்த்தியே யாட்கொள்வான்.



## இராமாயணத்தைப் பற்றிய பழமொழிகள்:

இராமாயணக் கதாகாலட்சேபம் தொன்று தொட்டு நம் நாட்டில் நடந்து வருகின்றது. பாமர மக்களிடையே பக்தியை ஊட்டுவதற்காகவும் நல்லறிவைக் கொளுத்துவதற்காகவும் இராமாயணக் கதாகாலட்சேபம் இரவு முழுவதும் நடைபெறுவதுண்டு. பாமர மக்கள் பேரார்வத்துடனும் பக்தியுடனும் கூட்டம் கூட்டமாகச் சென்று கதாகாலட்சேபத்தை ஆர்வத்துடன் கேட்பார்கள்.

ஒருவன் இராமாயணக் கதாகாலட்சேபத்தைக் கேட்கச் சென்றான. இரவு முழுவதும் கேட்டான. மறு நாள் அவன் நணபன் அவனை (கதா காலட்சேபம் கேட்டவனை) நோக்கிச் சீதைக்கு இராமன் என்ன முறை வேண்டும்? என்று வினவினான். சித்தப்பா என்று விடையளித்தான் கதா காலட்சேபம் கேட்டவன். இவ்வுரையாடலை அருகிலிருந்து கேட்டுக் கொண டிருந்தவன் ''விடிய விடிய இராமாயணம் கேட்டுச் சீதைக்கு இராமன் சித்தப்பா என்றான்'' என்று குறிப்பிட்டான். அதுவே பழமொழியாகி விட்டது. யாராவது கவனக் குறைவினால் சரியாகவும் முழுமையாகவும ஒன்றை செவிமடுக்காமல் அரை குறையாகக் கேட்டுவிட்டுத் தப்பும் தவறுமாகப் பேசினாலோ மறுமொழி உரைத்தாலோ அச்சூழ்நிலையில் இப்பழமொழியைச் சொல்வதுண்டு.

ஒருவன் இராமாயணக் கதை கேட்கப் பாய் தலையணையுடன் சென்றான். இராமாயணக் கதை தொடங்கியவுடன் அவனுக்குத் தூக்கம் வந்து விட்டது. குறட்டைவிட்டுக்கொணடே தூங்கினான். அருகிலிருந்தவன் இவன் மேல் ஏறி உட்கார்ந்து கொணடான். பொழுது விடிந்தது; கதையும் முடிந்தது. உட்கார்ந்திருந்தவனும் எழுந்தான்; உறங்கினவனும் எழுந்தான். உறங்கினவன்தான்

(25-ம் பக்கம் பார்க்க)

# அன்னமய்யா புகழ்



பாமாலைத் தொடுத்துப் பரமனைத் துதிக்கையில் ஏற்படும் இன்பத்திற்கு ஈடிலலை போலும். இவ்வழிபாட்டின்போது 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்' என்பது போல், ஒருவர் பெற்ற அந்தப் பேரின்ப அனுபவம் பாக்களின் பொருள், இசை ஆகியவற்றின் மூலம் அனைவருக்கும் கிட்டுகின்றது. இவ்வழி நின்று அவ்வேழுமலைகளின்மீது நின்ற வண்ணம் அருள்புரியும் அம்மாலவன்மேல் சுமார் 32,000 கீர்த்தனைகள புனைந்து, பின்வந்த ஸ்ரீதியாகராஜர், புரந்தர தாஸர், சூர்தாஸ் போன்ற இசையுலக மேதைகளுக்கும் வழிகாட்டியாகவும் விளங்கிய கி.பி. 15-ம் நூற்றுண்டைச் சார்ந்த தாள்ளபாக்கம் ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் இவ்வாண்டு நினைவு நாள் விழா அண்மையில திருப்பதியில் வெகு விமர்சையாக தி.தி. தேவஸ்தானத்தாரால் கொண்டாடப்பட்டது. 8 நாட்கள் நடைபெற்ற இவ்விழா, இசைவிழாவாகவும் கொண்டாடப்பட்டு, அதுபோது புகழ்பெற்ற பாடகர்களின் இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெற்றன. மேலும் ஸ்ரீ அன்னமாச்சார்யா அவதரித்த திருத்தலமான தாள்ளபாக்கம் கிராமத்தினை அவர் நினைவாக 'ஆந்திர திருவையாருக', மாற்ற, தி. தி. தேவஸ்தானம் அண்மையில் அதனைத் தன் நேரடி பொறுப்பில் ஏற்றுக்கொண்டுள்ளது.



1. ஸ்ரீ அன்னமாச்சார்யா 31வது நினைவு நாள் விழா மற்றும் ஸ்ரீ அன்னமாச்சார்யா ஸ்ரீ தியாகராஜா இசைவிழா நிகழ்ச்சிகள்.

(பக்கம் 17, 18, 19, 20, 21, 22.)

2. ஸ்ரீ அன்னமாச்சார்யா அவதரித்த திருத்தலமான தாள்ளபாக்கம் கிராமத்தினை தி. தி. தேவஸ்தானம் தன் பொறுப்பில் 'தத்து' எடுத்துக்கொண்ட நிகழ்ச்சிகள்.

(பக்கம் 23, 24 )

ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ அன்னமாச்சார்யா திருவுருவப் படங்கள் நகரில் திருவீதிவலமாக எடுத்துச் செல்லப்பட்டன.



எட்டு நாட்கள் நடைபெற்ற இவ் இசை விழாவுக்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் வரவேற்றார்.

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர். எம். சாந்தப்பா அவர்கள், இவ்விழாவிற்குத் தலைமை வகித்து, அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் 26வது தொகுதியினை வெளியிட்டார்.





திரு. வோலேட்டி வேங்கடேஸ்வரலு & குழுவினர் (வாய்ப்பாட்டு.)



ஸ்ரீ அன்னமாச்சார்யா கவிதைகள் வெளியீட்டுப் பிரிவின் சிறப்பு அலுவலர் திரு. ஜி. ராமசுப்பசர்மா அவர்கள் உரையாற்றுகையில்



திரு. கே. மல்லிகார்ஜுனராவ் & குழுவினர் (வாய்ப்பாட்டு)



திரு. மஞ்சால ஜகந்நாதராவ் & குழுவினர் (வீணை)



திருஃ வை. ஸ்ரீநிவாசராவ் அவர்கள் உரையாற்றுகையில்



டாக்டர். புட்டபர்த்தி நாராயணு சார்யலு அவர்கள் உரையாற்றுகையில்



பேராசிரியர் டி.என். கிருஷ்ணன் & குழுவினர் - தி. தி. தே. ஆஸ்தான வித்வான் - (தனி வயலின்)



திரு. நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் & குழுவினர் - தி. தி. தே. ஆஸ்தான வித்வான் (நாதஸ்வரம்)



திரு. வி. எஸ். வெங்கட்நாராயணு அவர்கள் உரையாற்றுகையில்



சங்கீத கலாநிதி திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி & குழுவினர் - தி.தி.தே. ஆஸ்தான வித்வான் - (வாய்ப்பாட்டு)



திரு. எஸ். சச்சிதானந்தம் அவர்கள் உரையாற்றுகையில்



கானகலாபிரபூர்ண டாக்டர். எஸ். பிணகபாணி & குழுவினர். (வாய்ப் பாட்டு)



சங்கீத கலாநிதி திருமதி. எம். எல். வசந்த குமாரி & குழுவினர்- தி.தி.தே. ஆஸ்தான வித்வான் - (வாய்ப்பாட்டு)



சங்கீத சிரோமணி திருமதி. மணி கிருஷ்ண சுவாமி & குழுவினர். (வாய்ப்பாட்டு)



மதுரகாயனி குமாரி. ஸ்ரீரங்கம் கோபால ரத்தினம் & குழுவினர்- தி.தி.தே. ஆஸ்தான வித்வான்-(வாய்ப் பாட்டு)

## தாள்ளபாக்கமும் தி. தி. தேவஸ்தானமும்



ஆந்திர மாநிலம் கடப்பை ஜில்லாவில் உள்ள தாள்ளபாக்கம் கிராமம்.



தாள்ளபாக்கம் ஸ்ரீ கேசவ சுவாமி கோயிலில் முக்கியப் பிரமுகர்களுடன் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர்.



தாள்ளபாக்க கிராமத்தினை 'தத்து' எடுத்து கொண்டதை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்கள் உரையாற்றுகையில்.



தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. சந்திரசேகரம் நாயுடு அவர்கள் இவ்விழாவில் பங் கேற்று உரையாற்றுகையில்.



இவ்விழா ஒட்டி தாள்ளபாக்கத்தில் திரு. டி. பசுபதி அவர்களின் இன் னிசைக்கச்சேரி ஒன்று நடைபெற்றது.



விழா' இறுதியில் ''சுபத்ரா கல் யாணம்'' எனும் நாட்டிய நாடகம் ஒன்று நடைபெற்றது.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டு வந்த பாய் தலையணையுடன் வீட்டிற்குச் சென்றான். அவன் மனைவி அவனை நோக்கி இராமாயணம் எப்படி இருந்தது என்று ஆவலுடன் கேட்டாள். உடனே அவன் 'ஒரு ஆள் சுமை இருந்தது' என்று விடையளித்தான். இராமாயணக் கதையைக் கேட்கச் சென்று உறங்கினவன் இராமாயணத்தைக் கேட்டு அறிந்து கொள்ளவில்லை. அதற்கு மாறாகத் தன்மீது அமர்ந்த ஆளின் பளுவைத் தான் அறிந்து உணர்ந்தான். அவனுக்கும் அவன் மனைவிக்கும் நடைபெற்ற உரையாடலே ஓர் பழமொழியாகி விட்டது. இதோ அப்பழமொழி.

''இராமாயணம் எப்படி இருந்தது: ஒரு ஆள் சுமை இருந்தது ''

இராமாயணம் மிக நீண்ட வரலாற்றுக் கதை. ஒவ்வொரு கட்டத்திலும் துயரமிக்க போரும் போராட்டமும் நிறைந்திருக்கின்றன. தாடகை வதைப்படலம், பரசுராமப் படலம், மந்தரை சூழ்ச்சிப்படலம், கைகேசி சூழ்வினைப்படலம், நகர் நீங்கு படலம், குகப்படலம், கிளைகண்டு நீங்கு படலம், விராதன் வதைப்படலம், கரன் வதைப்படலம், சூர்ப்பணகை சூட்சிப் படலம், மாரீசன் வதைப் படலம், சடாயு உயிர் நீத்த படலம், கவந்தன் வதைப்படலம், வாலி வதைப்படலம், பொழிலிறுத்த படலம், கிங்கரர் வதைப் படலம், சம்பு மாலி வதைப் படலம், பஞ்சசேனாதிபதிகள் வதைப் படலம், அக்ககுமாரன் வதைப்படலம், பாசப் படலம், பிணி விடு படலம், இலங்கை எரியூட்டுப் படலம் முதலிய படலங்கள் மனப் போராட்டமும், புறப்போராட்டமுமாக இருக்கின்றன. யுத்த காண்டம் முழுவதும் இராமன்-இராவணன் போரையே மையமாகக் கொண்டு இலங்குகின்றன. சுருங்கக் கூறுமிடத்து இராமாயணத்தைப் போராட்டக் காப்பியம் என்று கூறலாம். எந்தச் செயலாவது மிக நீண்டதாகவும், கடுமையான போராட்டம் நிறைந்ததாகவும் இருந்தால் 'இதென்ன பெரிய இராமாயணமாயிருக்கு' என்று சொல்வதுண்டு. பாமர மக்களிடையே பெரு வழக்கில் உள்ள இவ்வாய்மொழி பழமொழியாக விளங்குகின்றது.

இராமன் திருமாலின் திருவவதாரம். திருமாலுக்கு மறு பெயர் பெருமாள். இராமனைப் பெருமாள் என்றும், இலக்குவனை இளைய பெருமாள் என்றும் குறிப்பிடுவது மரபு. இராமாயணத்தைப் படிப்பவன் இராமாயண நீதிகளுக்கும் குறிக்கோளுக்கும் முரணாகச் செயல்பட்டால் 'படிக்கிறது இராமாயணம் இடிக்கிறது பெருமாள் கோயில்' என்னும் பழமொழியைச் சொல்வதுண்டு. இதே பொருளில் 'படிக்கிறது திருவாய்மொழி இடிக்கிறது பெருமாள் கோயில்' என்றும் சொல்வது மரபு. இக்கருத்தை உணர்த்தச் சைவர்கள், 'படிக்கிறது திருவாசகம் இடிக்கிறது சிவன் கோயில்' என்று சொல்லுவார்கள்

'இராமக்கோனான் மனைவியை இராவணக் கோனான் கொண்டு போனான். இராமக் கோனான் அடித்துப் பிடித்துத் திரும்பக் கொண்டு வந்தான்' என்று இராமாயண வரலாற்றை வேடிக்கையாக இரண்டே வாக்கியத்தில் அடக்கிச் சொல்வதுண்டு. இவ்வேடிக்கை மொழி பழமொழி போலவே அமைந்துவிட்டது. 'காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனான்' என்ற பழமொழியும் இதையொட்டியே எழுந்தது.

## இராமன்:

இராமாயணக் காப்பியத் தலைவனாகிய இராமன் தன்னேர் இல்லாத தலைவனாகத் திகழ்கின்றான். கம்பர், இராமனை வெறுங்காப்பியத் தலைவனாக மட்டும் கொள்ளாமல் திருமால் திருவவதாரமாகப் போற்றிப் பாடியுள்ளார். இவ்வுண்மையை நிறுவக் கம்பராமாயணத்தில் அங்கிங்கு எனாதபடி எங்கும் சான்றுகள் மலிந்து கிடக்கின்றன. கம்பர் தன் இராமாயணத்திற்கு இட்டபெயர் 'இராமாவதாரம்' என்பது இவண் சிந்திக்கத் தக்கது.

இராமனது பல்வேறு உயர் பண்புகளை இராமாயணம் எடுத்துரைப்பது போலப் பழமொழிகளும் எடுத்துரைக்கின்றன. அயோத்தி அனைத்து நலன்களும் வாயக்கப் பெற்ற சிறந்த நகரம். அயோத்தியில் உள்ள அனைத்துச் செல்வங்களையும்விட இராமனையே பெறற்கரும் பெருஞ் செல்வமாக அயோத்தி

ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண சுவாமி கோயில்-ஹொஸஹொலலு, திரு. கே. வி. ஸ்ரீநிவாச பிரஸாத்-மைசூர்.



மக்கள் போற்றினுர்கள்: இராமன் அயோத்தியை விட்டுக் காட்டுக்குச் செல்ல விருக்கிருன் என்பதைக் கேட்டவுடன் அனைவரும் அழுதனர்; விலங்கு, பறவை முதலிய உயிரினங்கள் எலலாம் அழுதன.

'' கிள்ளையொடு பூவை அழுத கிளர்
மாடத்து
உள்ளுறையும் பூசை அழுத உணா
வறியாப
பிள்ளை அழுத பெரியோரை என்
சொல்ல
வள்ளல் வனம்புகுவான் எனறு
ரைத்த மாற்றத்தால''

'' ஆவும் அழுதஅதன் கன்றழுத
அன்றலர்ந்த
பூவும் அழுதபுனல புள்அழுத களா
ஒழுகும்
காவும் அழுத களிறழுத கால்வயப
போா
மாவும் அழுதனஅம் மன்னவனை
மானவே''

(அயோத்தியா காண்டம்: நகர் நீங்கு படலம்.)

இராமன் இல்லாத அயோத்தி பொலி விழந்து வெறிச் சென்று இருந்ததையும், இராமன் எங்கிருக்கின்றுனே அதுவே அயோத்தி என்பதையும் மக்கள் உணர்ந்தனர். அவ்வுணர்வின் ஆழத்திலிருந்து தோன்றியவை பின்வரும் பழமொழிகள.

'இராமன் இல்லாத அயோத்தி போல'
'இராமன் இருக்குமிடம் அயோதநி'

கௌதம முனிவரின் சாபத்தால அகலிகை கல்லானுள். இராமன் திருவடி பட்டதும் கல்லாக இருந்த அகலிகை உயிர் பெற்று எழுந்தாள். 'பகவான பாதம் பட்டால் பாருங் கல்லும் பெணணுகாதா?' என்னும பழமொழி இதை அறிவிக்கின்றது. 'கைவணணம் அங்குக் கண்டேன், கால வண்ணம் இங்குக் கண்டேன்' என்பது கம்பர் வாக்கு.

காட்டில் முனிவர்கள் யாகம் செய்தனர். முனிவர்களுக்கும் யாகத்திற்கும் சிறு தீங்கும் நேராதவாறு

இராமன் கண்ணும் கருத்துமாகக் காவல் புரிந்தான். ஒரு பொருளை மிகப் பத்திரமாகப் பாதுகாத்தல் வேண்டும் என்று யாருக்காவது அறவுரை கூறு மிடத்து 'இராமன் யாகம் காத்தது போலக் காக்க வேண்டும்' என்னும் பழமொழியாகச் சொல்வதுண்டு.

இராமன் பேராற்றல் படைத்தவன். அவன் வில்லுக்கும் (கோதண்டம்), அம்புக்கும் (பாணம்) நிகராக உலகத்தில் ஒன்றுமே இல்லை. 'கோதண்டத்திற்கு எதிர் தண்டம் உண்டா?' 'இராமபாணத்திற்கு எதிர்பாணம் உண்டா?' என்பவை பழமொழிகள். 'குறிக்குத்தப்பா இராமசரம்' என்பது மற்றொரு பழமொழி. இப்பழமொழி குருவிக்குத் தக்க இராமேசுவரம் என்று தவருக வழங்கப்பட்டு வருகின்றது. 'ஊர்க்குருவி மேல் இராம பாணம் தொடுப்பதா?' 'சிட்டுக்குருவி மேல் இராமபாணம் தொடுக்கலாமா?' போன்ற பழமொழிகள் இராம பாணத்தின் வலிமையைப் பறை சாற்றுகின்றன. இராமன் தாடகை மேல் எய்த அம்பு எவ்வளவு விரைவாகச் சென்று வெளிவந்தது என்பதைக் கம்பர் பின் வரும் பாடலில் மிக இனிமையாகப் பாடுகின்றார்.

'' சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம் கரியசெம்மல்
அல்லொக்கும் நிறத்தினுள்மேல் விடுதலும் வயிரக்குன்றக்
கலலொக்கும் நெஞ்சில் தங்காது அபபுறம கழன்று கலலாப்
புல்லர்க்கு நலலோர் சொன்ன பொருளெனப போயிற்றன்றே.''

(பாலகாணடம் தாடகை வதைப்படலம் )

இராமன் தலைசிறந்த வில்வீரன் என்பதை நிறுவ இப்பாடல் ஒன்றே போதும். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பது இராமன் ஆற்றலை உணர்த்த எழுந்த தலைசிறந்த பழமொழி.

பாவத்தின் வடிவமாக இருந்த இராவணனைக் கொல்லுவதற்காகவே தெய்வத்தின் திருவுருவமாம் இராமன் தோன்றினன் என்பது பொதுவான கருத்து. இக்கருத்தை யொட்டியே 'இராமன் பிறப்பு இராவணன் இறப்புக்கு;' ''தசரதன் மகன் தசகண்டனுக்கு எமன்.' என்னும் பழமொழிகள் தோன்றின.

உலகம் முழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளும் மாபெரும் வேந்தனுக இருந்தாலும், அவனுக்கும் துன்பம் உண்டு. அரண்மனையில் இன்பமாக இருக்க வேண்டிய இராமன் காட்டில் புல் படுக்கையில் படுத்து உறங்கினன். 'இராமனுக்கும் ஆரண்ய வாசம் லபிக்கலையோ?' ''இராமனுக்கும் தர்ப்பைப் படுக்கை லபிக்கலையோ?'' முதலியவை இராமயணப் பழமொழிகள்.

'அல்லல் ஒரு காலம் செல்வம் ஒரு காலம்' 'யானைக்கொரு காலம் பூனைக்கொரு காலம்?' 'முப்பது வருஷம் வாழ்ந்தவனுமில்லை முப்பது வருஷம் கெட்டவனுமில்லை.' பாயில் படுத்தவன் பாயிலேயே படுத்திருப்பானு?' முதலிய பொதுப் பழமொழிகளும் இங்கு ஒட்டி நோக்கத் தக்கன. வாழ்வும் தாழ்வும் மாறி மாறி வரும் என்பதை உணர்த்த மேற்குறிப்பிட்ட இராமாயணப் பழமொழிகளைச் சொல்வதுண்டு.

மக்கள் சிலர்க்கு அரசியல் உணர்ச்சியோ நாட்டுப்பற்றோ இருப்பதில்லை. அவர்கள் தம் அலட்சிய மனப்பான்மையையும், அக்கறையின்மையையும் காட்ட 'இராமன் ஆண்டால் என்ன? இராவணன்ஆண்டால்என்ன?', 'இராமன் ஆண்டால் எனன? இலட்சுமணன் ஆண்டால் என்ன?', 'இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன? கூட இருந்த குரங்கு ஆண்டால் என்ன?' என்று சொல்லுவார்கள். இவையாவும் பழமொழிகளாக நிலைத்துவிட்டன. தலைவன் நல்லவனுக இருந்தால் தொண்டனும் நல்லவனுக இருப்பான்' என்னும் கருத்தை உணர்த்த, 'இராமனைப்போல் அரசன் இருந்தால் அனுமானைப் போல் சேவகன் இருப்பான்' என்று மக்கள் சொல்லுவார்கள். மக்கள் மொழியே பழமொழியாகி விட்டது. 'இருக்கிறவன் ஒழுங்காயிருந்தால் சிரைக்கிறவன் ஒழுங்காய்ச் சிரைப்பான்.' என்னும் பழமொழியும் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

'தான் ஆடாவிட்டாலும் தன் தசை ஆடும்' என்பது பழமொழி. பற்றற்ற இராமனே சீதையைப் பறிகொடுத்தவுடன் கலங்கிப் புலம்பினன். 'இராமனேயானுலும் சீதைக்காக அழவில்லையா?' என்பது பழமொழி. இராமன் பெயரைச் சொல்லுவதும் கேட்பதும் இனிமையும் பெருமையும் ஆகும். இராமன் பெயரைச் சொன்னுலும் சொல்லக் கேட்டாலும் பிறவி நீங்கும் என்பது நம்பிக்கை. 'இராம நாமமே கற்கண்டு, அதன் ரசம் அறியாதவர் கற்குண்டு' என்பது பழமொழி.

## இராமன் பெயர்:

இராமன் பெயரைச் சூட்டி மகிழ்வதில் நம் நாட்டு மக்களுக்குப் பெரு விருப்பம் உண்டு. பெற்றோர் தம் முதல் மைந்தனுக்கு இராமன் என்றும், இரண்டாவது மைந்தனுக்கு இலக்குவன என்றும் பெயர் சூட்டுவதை இன்றும் காணலாம். இராமன் பெயர் பல்வேறு வடிவங்களில் நம் நாட்டு மக்களுக்குச் சிறப்புப் பெயர்களாக வழங்கி வருகின்றன.

மிகுதியாக உண்பவனையும், உண்பதில் மிகுந்த ஈடுபாடு உள்ளவனையும் சாப்பாட்டு ராமன் என்று வேடிக்கையாகச் சொல்வதுண்டு. அனைத்துத் துறையிலும் மிகச் செம்மையாக அமைந்த நாட்டை ஆங்கிலத்தில் உடோபியா (Utopia) என்று சொல்வதைப் போல நம் மொழியில் இராம

ராஜ்யம் என்று சொல்வதுண்டு. காந்தி யடிகள் இந்தியாவை இராம ராஜ்ய மாக்க அரும்பாடுபட்டது அனைவரும் அறிந்ததே.

சீதை

சீதையை இலக்குமியின் அம்ச மாகக் கருதுவது மரபு. சீதையின் பண்பு நலன்களை எந்த அளவுக்குப் போற்றிப் புகழ இயலுமோ அந்த அளவிற்குப் போற்றிப் புகழ்ந்துள் ளார் கம்பர். இராமன் கானகத் திற்குச் சென்றபோது சீதையும் உடன் சென்றாள். அவள் இராமனை நோக்கி 'உன் பிரிவைக் காட்டிலும் காடு சுடுமோ!' என்று வினவினாள். காட் டின் கொடுமையையும் வெம்மையை யும் கூடப் பொருட்படுத்தாமல் தன் கணவனுடன் இருந்து கொண்டு எப் போதும் அவனுக்குத் தொண்டு செய் யவே விரும்பினாள் சீதை. இந்நிலையில் தோன்றியது 'இராமன் இருக்குமிடம் சீதைக்கு அயோத்தி' என்னும் பழ மொழி.

சீதையின் கற்புத் திறத்தால் இரா வணன் அழிந்தான், இலங்கையும் அழிந்தது. இவ்வுண்மையைக் கீழ்க் காணும் பழமொழிகள் மெய்ப்பிக் கின்றன. 'சீதை பிறக்க இலங்கை அழிய' 'சீதை பிறந்தாள் இலங்கை அழிந்தது.' கொடியவர்களிடையில் நல்ல பெண்மணி ஒருத்தி இருந்தால் அவளை 'அசோக வனத்துச் சீதை போல' என்று குறிப்பிடுவதுண்டு. சீதை பிறந்ததால் கற்பு, பெண்மை, நோன்பு முதலிய யாவும் ஆக்கமும் பெருமையும் பெற்றன. எனவே ஆக் கும ஆற்றல் சீதைக்கு உண்டு. அதைப் போலவே சீதை பிறநததால் இராவ ணன் அழிந்தான்; அரக்கர்கள் அழிந் தனர்; இலங்கையும் அழிந்தது. சீதைக்கு ஆக்கும் ஆற்றலும் உண்டு; அழிககும ஆற்றலும் உண்டு என்பதை உணர்த்தவே 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெணணாலே' என்னும் பழ மொழி தோன்றியது.

இலக்குவன் :

இலககுவனுக்கு முன்கோபம் மிகுதி. இராமன் அமர வேண்டிய அரியணையில் பரதன் அமரவிருக்கிறான் என்பதை அறிந்தவுடன் அவன் அடைந்த கடுஞ்சீற்றத்துக்கு அளவே இல்லை. அவன் விழிகளில் கோபக் கனல் வீசியது. புருவம் நெரிந்தது. உடம்பில் வியர்வை மிகுதியாகத் தோன்றியது. உள்ளிருந்து உயிர்ப்பு எழுந்தது. என் சிற்றன்னை (கைகேயி) 'சிஙகக குட்டிக்கு இடுகின்ற சுவை மிக்க இறைச்சியை ஓர் அற்ப நாய்க் குட்டிக்கு இட நினைத்தாள்' என்று இலக்குவன் பெருஞ் சீற்றத்துடன் கூறினான்.

''சிங்கக்குருளைக்கிடு தீஞ்சுவை ஊனை நாயின்
வெங்கட்சிறு குட்டியை ஊட்ட விரும்பி னாளால
நங்கைக்குஅறி வின்திறம் நன்றிது நன்றி தென்னாக்
கங்கைக்கிறை வன்கமலக்கை புடைத்து நக்கான்.''

(கம்பராமாயணம்: அயோத்தியா காண்டம் நகர் நீங்கு படலம் )

இலக்குவன் முன்கோபக்காரன் என்பதை மெய்ப்பிக்க இதைப் போன்ற சான்றுகள் இராமாயணம் முழுவதும் உணடு. முன்கோபக் காரனைக் குறிப்பிடுமிடத்து 'இலட்சு மணன்போல் இவனுக்கு மூக்குமேல் கோபம்' என்று சொல்வதுண்டு. இது பழமொழியாக நிலவி வருகின்றது.

(அடுத்த இதழில் முடியும் )

(தொடர் கட்டுரை)

# சிறையிருந்த செல்வி

பகுதி – 3



**கற்பின் செல்வி :**

வான்மீகத்தில் இல்லாது கம்ப ராமாயணத்தில் உள்ள புதுமைகளில் ஒன்று, திருமணத்திற்கு முன்பே சீதையும், ராமனும் சந்தித்த நிகழ்ச்சியாகும். மிதிலை நகரில் விசுவாமித்திர மாமுனியுடனும், தம்பி இலக்குவனேடும் நடந்து வரும் இராமன், துங்கமணி மாடத்தில் மயிலென நின்றிருக்கும் சீதையை ஊழின் வலிமையால் காணுகிறுன். சீதையும் இராமனை நோக்குகிறுள். இருவர் நோக்கும் ஒன்று சேருகின்றன. இயற்கைப் புணர்ச்சி ஏற்படுகிறது இதனையே கம்பன்,

''கண்ணேடு கண்ணினை கவ்வி
யொன்றினை யொன்று
உண்ணவு நிலைபெரு துணர்வு
மொன்றிட
அண்ணலு நோக்கின ளவளு
நோக்கினுள்''

திரு. என். கிருபானந்தன்,
M.A., BSc, Jr. Dip-in-Ling,
திருப்பதி.

என்று அழகுற வருணிப்பான். பாசமெனும் கயிற்ருல் ஒருவரையொருவர் கட்டி ஒருவர் மனச்சிறையில் ஒருவராக மாறிப் புகுந்து சிறைபடுத்திக் கொள்கின்றனர். ஒரு விநாடியில் இவ்வளவும் நிகழ்ந்துவிடுகிறது. இராமன் முனிவனுடன் சென்று விடுகிறுன். அவனைத் தொடர்ந்து சீதையின் நோக்கு செல்கிறது. 'கண்ணிமைத்தால் அழகனைப் பருகுவது எங்கு நின்றுவிடுமோ?'' என்று கண்ணிமைக்காது ஓவியப் பாவை போல் இராமனையே பார்த்து நிற்கிருள் சீதை. அவளது சிந்தையும், நிறையும் இராமன் பின்னரே சென்றுவிடுகிறது. இராமன் மீது அளாவிலாக் காதல் கொள்ளும் கன்னி, அவன் பிரிவைத் தாளாது காதல்வேதனை கொள்கிறுள். அவள் காதல் துயரத்தைக் கம்பன் மிகவும் விரிவாக அமைத்துச் செல்வான். (மிதிலைக் காட்சிப் படலம் 40-82; கார்முகப் படலம் 45-54) அந்தி வானையும், மாலைப் பொழுதையும் கண்டு இரங்குகிறுள் சீதை. உதயமாகும் சந்திரனைக் ''கரு நிறமுள்ளதொரு தீயினிடையே எழுந்த வெண் நெருப்பே'' என்று பழித்துப் புலம்புகிறுள். அவள் வேதனையைத் தெரியாது தோழியர் அவள் உடல் வெம்மையினைக் குளிர்விக்கக் கலவை சந்தனத்தைப் பூசுகின்றனர்.

'' செந்தழலின் சாற்றைப் பிழிந்து
செழுஞ்சிதச்
சந்தனமென் ருரோ தடவினுர்''

என்று நந்திக் கலம்பகத்தலைவி பதை பதைத்துத் தவித்தது போன்று சீதை துவள்கிறாள்; வெதும்பி தவிக்கிறாள்.

இங்ஙனமெல்லாம் சீதை இராமன் மீது கொண்ட காதலைக் கம்பன், காவியத்தின் போக்கு ஊறுபடா வண்ணம் அமைத்து, சீதையின் சிறப்பை உயர்த்த முனைகிறான்.

அடுத்து, "இராகவன் வில்லை உடைத்தான்" என்ற செய்தியை அறிந்து மிதிலை நகர மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றனர். அந்த மிதிலை நகரத்தில் எங்கும், வெண்ணிற முள்ள சங்கமும், அமுதத்தின் இனிமை கலந்த பலவகை இசைககருவிகளும் ஒலியை உமிழா நிற்கின்றன. மக்கள் மலர் மாலைகளையும், அணிகலன்களை யும், சந்தனத்தையும், நறுமணப் பொடியையும், நெய்யையும், முத்தை யும், பொன்னையும், இரத்தினங்களை யும், நுண்ணிய ஆடைகளையும், ஒரு வர்க் கொருவர் மகிழ்ச்சிப் பெருக் கால் மற்றவர்க்கு வாரி வழங்கிக் கடலைப்போல் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கின்றனர். கார்முகிலைக் கண்ட மயில், தன் தோகையை விரிதது அழகாகக களியாட்டம் ஆடி மகிழ்வ தைப்போன்று மக்களெல்லாம், மகிழ்ச் சியால் கூத்தாடுகின்றனர். நீங்காப் புலவி கொண்ட மாதர்களும், இம் மகிழ்ச்சியான செய்தியைக் கேட்டுப் புலவி நீங்கிக் கணவன்மாரைத்தழுவித் தங்கள் மகிழ்ச்சியைப் புலப்படுத் தினர்" என்றெல்லாம் விவரிததுச் செல்லும் கம்பன் அடுத்துச் சீதையின் நிலையைக கூறுகிறான்.

இராமன் மீதான காதல் நோயால் வாடித் துவண்டு கிடக்கும் சீதையினை நாடி ஓடி வருகிறாள ஒரு தோழி. மகிழ்ச்சி நிறைந்த குரலால் தசரதன மகன் வில்லினை உடைத்த செய்தி யினைக் கூறுகிறாள்.

"மராமர மிவையென வளர்ந்த தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோ வொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினான"

"இராமன் என்பவன், தம்பியாகிய அரச குமாரனுடனும், துதித்தற்கு அருமையான மிக்க மகிமையை யுடைய விசுவாமித்திர முனிவனுடன் வந்து சோந்தான். அக் குமரன் சிவதனுசைச் சனகராசனுடைய அனுமதியின பேரில் மேலுலகம் நடுங்க, வெகு எளிதாக எடுத்து நாணேற்றினான். வானவர் பூ மழை பொழிய, அரசவையினர் நடுங்கும் படி அவ் வில் முறிந்தது" என்று தோழி கூறிய சொற்களைக் கேட் கிறாள் சீதை. விசுவாமித்திரனுடன் வந்த மேகம் போன்ற வண்ணன், செந்தாமரைக் கண்ணனாகிய திரு மாலைப் போன்ற ஆற்றலுடையவ னென்று சொல்லிய வகையினால், "அவன் என் காதலுக்கு உரிய இளை னாகத்தான் இருக்க வேண்டும்" என்று சற்று ஐயம் நீங்குகிறாள் சீதை. ஆயி னும் முழுவதும் உண்மை தெரியாத தால்,

"இவள் சொன்ன அடையாளங் களால், அவ்வில்லை முறித்தவன் நான் கன்னிமாடத்திலிருந்து கண்டு காத லித்த ஆடவனாகத்தான் இருக்க முடி யும். அப்படி அவனாக இராமற் போனால் உயிரை விட்டொழிப்பேன்" என்று தன் மனதிற்குள் சபதம் செய்து கொள்கிறாள் சீதை.

இந் நிகழச்சியாலும் சீதையின் கறபு முதலிலேயே நன்கு வெளிப்படு வதைக் காணலாம்.

கற்புடைய கன்னி ஒருத்தி ஓர் ஆட வனைத் தன் மனதில் வரித்து விட்டா ளாயின், மணந்தால் அவனையே மணப் பாளே தவிர, வேறொருவனை மனத் தாலும் மணக்க எண்ணமாட்டாள். உயிரை வேண்டுமானாலும் விடவும் துணிவாள். இதையேதான் சீதையும் செய்யத் துணிகிறாள்.

ஆனால் சிலர் வாதிக்கக் கூடும். சீதையோ. தந்தையின் ஆணையின் படி, வில்லை முறித்தவனையே மணக்க வேண்டும் என்ற நிலையிலிருக்கும் போது ஒருவனைக் காதலிக்க என்ன உரிமையுள்ளது? என்று கேட்கலாம். காதல் என்பது பிறர் கட்டுப்பாடு களுக்கும், சட்ட திட்டங்களுககும் கட்டுப்படக்கூடியதன்றே. ஊழின் வலியால், பிறப்புக்கள் தோறும் தொடர்ந்து வரும் தொடர்பால் இயற்கைப் புணர்ச்சியினைப் பெற்றுக் காதல் கொள்வர் உண்மைக் காதலர் என்று தமிழ் இலக்கணம் கூறுகிறது. சீதையும் இராமனும் வேறொருவரோ அல்லர். திருமாலும், பிராட்டியும். அவர்கள் இயற்கைப் புணர்ச்சி பெற்றது ஊழின் வலிமையாலேதான் என்பதை உணர்த்துவான் போலக் கம்பன்,

"கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ"

என்று குறிப்பாக உணர்த்துவான்.

சீதை இராமனைக் காதலித்ததும், வில்லை உடைத்தவன் இராமனன்றி வேறொருவராக இருப்பின் இறப்பேன் என்று உறுதி கொண்டது சீதையின கற்பின் திறத்தை மேன் மேலும் சிறப்பிக்கின்றன.

இன்னொரு காட்சி:

மணி முடி கவித்து, மன்னனாக வேண்டிய இராமன், தந்தையின் ஆணையாகத் தாய் கூறியவற்றைக் கேட்டு மரவுரி தரித்துச் சீதையிடம வருகிறான். தான் கானகம் செல்ல வேணடிய தேவையை எடுத்துக கூறிச சீதையை அயோத்திலேயே ஆற்றி யிருக்குமாறு கூறுகிறான் இராமன். ஆனால் சீதையோ அதனைக் கேட்டுத் துடித்து மறுக்கிறாள். 'இராமன் இருக்குமிடமே அயோத்தி' என் றெண்ணி அவனுடன் தானும் கானகம் செல்ல உறுதி கொள்கிறாள். துன் பமோ, இன்பமோ எதையும் தன்

கணவனுடன் சரிசமமாகப் பகிர்ந்து அனுபவிப்பதையே எந்தக் கற்புக் கரசியும் விரும்புவாள். இராமன், காட்டு வழியிலுள்ள கற்களின் வெம் மையைச் சீதையின் மெல்லடி தாங் காது துன்புறும் என்று தடுத்துப் பார்க்கிருன். 'உன்னுடன் வந்தால் என் பாதம் மட்டும்தான் சுடும். உள்ளம் குளிர்ச்சியாக, மகிழ்ச்சியாக இருக்கும். ஆனுல் இங்கு அயோத்தி யில் இருந்தால் உளமும் சுடுமே' என்று உணர்த்துவாள் போல, ''நின் பிரிவினும் சுடுமோ பெருங்கான்'' என்று கூறித் தன் முடிவை வெளி படுத்துகிருள்.

வான்மீகத்திலோ, இராமன் சீதைக் குப் பலப்பல அறிவுரைகள் வழங்கு கிருன். சீதையும் பலவாருக மறுத் துக் கூறித் தானும் உடனவருவதாக வற்புறுத்தி வாதாடுவாள். ஆனுல் கம்பனே அதற்கு இடம் தருவதில்லே. கம்பராமாயாணத்தில் சீதை இராம னுடன் நீளமாக வாதாடி நிற்பதில்லே. உள்ளே சென்று மரவுரி தரித்து விரைந்து வந்து இராமனின் கைகளேப் பிடித்துப் பயணத்திற்குத் தயாராகி விடுகிருள். இராமன், 'என்ன செய் வது? எப்படித் தடுப்பது?' என்று தெரியாமல் நின்று தவிக்கிருன். இங்கும் சீதையின் கற்பையே காணு கிருேம். அதுவரை சுகபோகத்தில் வாழ்ந்து வந்த சீதை, கணவனுக்காகக் கானகம் செல்லவும் தயாராகிவிடு கிருள். கம்பனும் இக்காட்சியை நீடித்து வளர்த்துச் செல்வதில்லே. 'சீதை ஒரு கற்புக்கரசி. தன்னேச் சிறிதும் பிரியாள். அயோத்தியில் தங்கமாட்டாள்' என்று இராமனும், 'இராமனே ஒரு கணமும் பிரிய விரும் பேன்' என்று சீதையும் எண்ணிய எண்ணத்தை நமக்கு உணர்த்துவான் போலக் கம்பன் இக்காட்சியைச் சுருக்கமாக முடித்து விடுவான்.

இங்கும் நாம் சிந்திக்க வேண்டிய தொன்று உண்டு. சங்க காலத் தமிழ் மரபின்படி கற்பில் நடும்பப் பெண்கள் இத்தகு பிரிவின்போது கணவனுடன் உடன் போக மாட்டார்கள். கண வனேப் பிரிய நேரிடும் கற்புடையப் பெண்கள் ஆற்றியிருப்பதைப்போன்று சீதையும் தமிழ் மரபின்படி ஆற்றி அயோத்தியிலேயே இருந்தாள் என்று அமைத்தாலும் சீதையின் கற்புச் சிறப்புடையதாகத்தான் இருக்கும். ஆனுல் இவ்வாறு அமைந்திருந்தால் காவியத்தின் போக்கு என்னவாகும்? இராவணன் சீதையை, எங எதனுல் சிறையெடுக்க வே. திருக்கும்? ஆகவே சீதை னுடன் கானகம் சென்றது தமிழ் ம. புக்குச் சற்று மாறுதலாக இருப்பினும், கதையின் கட்டுக் கோப்பை நோக்கும் போது தேவையானதாகவே உள்ளது. எனினும் சீதையின் கற்பு இதனுலும் தாழ்வுறுவதில்லே. மாருக மேன் மேலும் கம்பன் கவித்திறத்தால் சிறப் படைகிறது. வான்மீகரைவிடக் கம்பன் சீதையின் கற்பை மிகவும் கவனத்துடன் சிறப்பாகப் போற்றிக் காவியம் இயற்றியுள்ளான் என்பது கவனிக்கத்தக்கது. (தொடரும்)

## அறிவிப்பு

திருமலேயில் காட்டேஜுகளுக்காக முன்பணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக் காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளே அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதி களுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தா லும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களே, சூழ்நிலேக் காரணமாக மாற்றிக் கொள்ள நினேத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப் பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத் திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண் ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலேவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# ஓர் அணுவையும் நீயே அசைப்பாய்!

திரு. க. அ. பிரகாசம் - கொடுமுடி.

★



வரவேணடும் வரவேண்டும் கண்ணு—புகழ்
வளர்ந்தோங்கும் காாமுகில் வண்ணு !
தரவேண்டும் தரவேண்டும் அருளே—நீ
தாரணி போற்றும் மெய்ப் பொருளே ! (வர)

மருவவே பக்தர்கள் நலமே—ஏழு
மலைமீது கொண்டனை தலமே !
பெருகிடும் நின் கருணை வளமே—நீ
பிறங்கிடும அன்பர்கள் உளமே! (வர)

கப்பிய வினைகளை அறுப்பாய்—மேலும்
காண்கின்ற பிழைகளையும் பொறுபபாய் !
சபதகிரிதனில் இருப்பாய்—போற்றும்
சதுர்மறை முதலாகச் சிறப்பாய் (வர)

கோபியா கொஞ்சும்கோ பாலன்—நீ
கோகுலம் காத்தபூ பாலன் !
தேவியர் மகிழும்திரு வாளன்—வான்
தேவாகள் பரவும்அரு ளாளன்! (வர)

பத்தவதாரங்கள் எடுத்தாய்—நீ
பலப்பல பாடங்கள் கொடுத்தாய் !
பகதி நெறியினைப படைத்தாய—எஙகள்
பாவங்கள யாவையும் உடைத்தாய !  (வர)

பாமபணை மீதினில் துயிலவாய்—ஆயா
பாடியி லேநடம் பயில்வாய;
ஆம்புகழ் வேயங்குழல இசைபபாய்—ஓா
அணுவையும் நீயே அசைப்பாய்! (வர)

★

அத்தியாயம்–10

விபூதி யோகம்: பகுதி – 11




# கீதை காட்டும் நல்வழி

'இறைவன் எங்கும் எல்லாரிடத்திலும் உறைகிறார் எனில், கொலைகாரர்களைக் கொலை செய்யத் தூண்டுவது, திருடர்களைத் திருடச் செய்வது சூதாடிகளை சூதாடச் செய்வது ஆகியவை எல்லாம் கடவுள்களின் செயல்கள் தானா?'—இப்படி ஒரு கேள்வியை ஒருவர் எழுப்பினால் அதற்கு நாம் என்ன பதில் கூறுவது?

இந்தக் கேள்விக்கான பதிலைக் கடவுளே தருகிறார்.

த்யூதம் சலயதாமஸ்மி
தேஜஸ தேஜஸ்விநாமஹம்: |
ஜயோSஸ்மி வயவஸாயோSஸ்மி|
ஸத்வம் ஸத்வவதா மஹம் ||36||

''வஞ்சகர்களுடைய சூதாட்டம் நான். தேஜஸ்விகளுடைய தேஜஸ் நான். வெற்றியாகவும், முயற்சியாகவும், சாத்விகர்களின் ஸத்வ குணமாகவும் நான் இருக்கிறேன்''

மனிதர்களில் எல்லோரும் ஒரே பாங்கில் இருப்பதில்லை. எத்தனைவித மக்கள் உண்டோ அத்தனை விதமான மனப்பாங்கினையும் காணலாம். குழந்தையாக இருந்த காலத்தில் நமது மனம் குறையற்று இருந்தது. குழந்தைப் பருவத்தில் நமது உள்ளம் பரந்தும் அறிவு சுருங்கியும் இருக்கிறது. வயதான பின்னர் அறிவு பெருகி விடுகிறது. ஆனால் உள்ளமோ சுருங்கி விடுகிறது. ஏன்? பல்வேறு வஞ்சக குணங்கள் நம் மனத்தினுள் குடிபுகுந்து விடுகின்றன. உடனுக்குடன் நாம் அந்த துர்க்குணங்களை வெளியேற்றி விட்டால் நமது மனம் பரிசுத்தமடைந்து விடும். ஆனால் நாமோ மென்மேலும் தீய குணங்கள் மனதினுள் புக அனுமதிக்கின்றோம். விளைவு 'இந்தக் கொடியவனா குழந்தைப் பருவத்தில் அவ்வளவு நல்லவனாக இருந்தான்?' என்று பிறர் நம்மைப் பார்த்துக் கேட்குமளவுக்கு நமது நடைபாவனை சொற்கள் மாறிவிடுகின்றன.

குழந்தை உள்ளமும், நிறைந்த அறிவும் நமக்கு வேண்டும் என்பதைப் புகட்டும் வகையில் தான் நமது தெய்வங்களுக்கு நல்ல உருவங்களை நம் முன்னோர் அளித்தனர். விநாயகப் பெருமானது உருவத்தில் கழுத்துக்குக் கீழே குழந்தையின் தோற்றம்,

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

அதற்கு மேல் அறிவிற் சிறந்த யானையின் முகம். முருகனும் அவ்வாறே குழந்தை உடலும், அறுமுகமும் கொண்டு விளங்குகிறான். 'நீ எவ்வளவு தான் கற்றாலும் எவ்வளவு உயர்ந்த பதவி வகித்தாலும் குழந்தை உள்ளத்தைப்பெற்று விளங்குவாயாக. உன் வாழ்வில் மகிழ்ச்சி ஏற்படும்', என்பதுவே நமக்கு அவர்கள் புகட்டும் பாடமாகும்.

திருடுதல், விலையை ஏற்றிக் கூறுதல், போலியை அசலெனக் கூறுதல், பொய்ப் பத்திரம் தயாரித்தல் போன்ற செயல்களெல்லாம் வஞ்சகச் செயல்களாகும். 'நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை' என்பது பழமொழி. நமது மனச் சாட்சிக்கு எதிராக நாம் செயல்படும் போதெல்லாம் அவை வஞ்சகச் செயல்களாகின்றன. சூதாட்டமும் அத்தகைய வஞ்சகங்களில் ஒன்றாகும். வஞ்சகம் என்றாலே பிறரை ஏமாற்றமுனைதல் என்றுதான்பொருள் படுகிறது. மனிதன் நாகரிகத்தில் மிகவும் முன்னேறி விட்டான் என்று பெருமைப்பட்டுக் கொள்ளும் இன்றைய நாளில் வஞ்சகமில்லாத துறையே இல்லை என்று எண்ணுமளவுக்கு வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் வஞ்சகம் பலவடிவங்களில் தாண்டவமாடுகிறது. நெஞ்சில் வஞ்சனையில்லாதவன் அதாவது 'பிறரை வஞ்சிக்கத் தெரியாதவன் உலகில் வாழத் தெரியாதவன்' என்று ஒருவன் மற்றவனைப் பற்றிக் கருதுமளவுக்கு இன்று மனித வாழ்வு வஞ்சகமயமானதாகி விட்டது.

ஆனல் பொதுவாக ஒவ்வொரு அரசாங்கமும் சில சூதாட்டங்களைச் சட்ட பூர்வமாக அங்கீகரிக்கிறது. லாட்டரிச் சீட்டு, குதிரைப் பந்தயம் போன்றவை இவற்றிற்கு சில உதாரணங்களாகும் திடீர்ப் பணக்காரராகலாம் என்ற ஆசைகாட்டி பலரிடமிருந்து பணத்தைப்பறித்து ஒரு சிலருக்குப் பெருந் தொகை அளித்தல் என்பதுவே இத்தகைய சூதாட்டங்களின் அடிப்படை நோக்கமாகும். இன்று மட்டுமல்ல, அன்றும் சூதாட்டம் வெளிப்படையாகப் பலர் முன்னிலையில் ஆடும் அளவுக்கு ஆட்சியாளர்களின் ஆதரவைப் பெற்று விளங்கியது. மகா பாரத யுத்தத்திற்குக் காரணமே கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையில் நிகழ்ந்த சூதாட்டம்தானே. அரசர்களுக்கிடையே நடந்த அந்த சூதாட்டத்தின் விளைவுகளால் ஒன்று மறியாப் பாமர மக்களும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். வஞ்சகச் செயல்கள் அனைத்துமே கேடு விளைவிப்பவை எனினும், அவற்றுள் சூதாட்டம் மட்டும் கொஞ்சம் வழிக்கு உட்பட்டது போலத் தென்படுகிறது. ஏனெனில் அதில் ஆடுபவனின் அறிவுத் திறமை வெளிப்படுகிறது. அறிவு இறைவனின் பிரஸாதம். விளக்கு வெளிச்சத்தில ஒருவன் பொய்க் கணக்கு எழுதுவது போன்று, சூதாடுபவனின் அறிவுத் திறனும் தெய்வத்திடமிருந்தே வருகிறது. இதை முன்னிட்டு வஞ்சகங்களுள சூதாட்டம் நான் எனப்பகவான் கூறுகிறுர். ஆனல் இதன் காரணமாக சூதாட்டம் ஆதரிக்கப்படுகிறது என நாம் தப்பர்த்தம் செய்து கொள்ளலாகாது. இதற்கு மற்றெரு விதத்திலும் பொருள் கொள்ளலாம். நமக்குத் தீங்கிழைக்கும் எதிரிகளிடத்திலும், கொடியது செய்யும் கொடியோரிடத்தும், வஞ்சகர்களிடத்திலும், கொலைகாரர்களிடத்திலும் எங்கும் நிறைகின்ற பரம்பொருளான இறைவனே உறைகின்றுன் என்பதால் யாராவது தீய செயலில் ஈடுபடும் போது நாம் மனப்பூர்வமாக இறைவனிடம், ''சர்வ வியாபியான பகவானே! தனது அறிவைத் தீய வழியில் பயன்படுத்தும் அவனுக்கு நல்வழி காட்டி அருள மாட்டீரா!'' என்று பிரார்த்தனை செய்யவேண்டும் 'எல்லாம் இறைவன் செயல். அனைத்தும் இறைவனது சொரூபம்' என்ற எண்ணத்தில் ஒருவன் நிலைபெற்று விட்டால் அவனுக்கு எவராலும் எத்தகைய தீங்கும் இழைக்க முடியாது. புலியிடத்தும் பகவான் நாராயணனைக் கண்டு தரிசித்த பக்தர் கௌராங்க மகாப்ரபுவைப் புலி தனது இரையாகப் பார்க்காது, அவரை நண்பனுகக் கருதி அவருடன் சேர்ந்து ஆடியது.

''தீமையை வெறு. தீயோர்களை வெறுக்காதே. ஏனெனில் இன்றைய பாபி நாளைய மகானுக மாறலாம்'' என்று குரு தேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அடிக்கடி கூறுவார். இந்த இடத்தில் இதை நாம் நினைவு கூறக் கடமைப்பட்டவர்களாக இருக்கிறேம். ஆனல் நாம் நமது வாழ்க்கையில் இதற்கு நேர் மாருகவே நடந்துகொள்கிறேம். நாம தீமையை வெறுப்பதில்லை. ஆனல் தீயவர்களைத் தான்

ஸ்ரீ வைஷ்ணவதேவி-வடதிருமுல்லைவாயில்: திரு. கே. சீதாராம்-கோவை.



வெறுக்கிறோம். ஏனெனில் நாம் எந்தெந்தத் தீமைகள் பிறரிடத்தில் இருக்கக் கூடாது எனக் கருதுகின்றோமோ அவற்றிற்கு நம்மிடத்திலேயே அநேக தடவைகளில் புகலிடம் கொடுக்கின்றோமே. ஆனால் சுவாமி சிவானந்தர் போன்ற மகான்களோ தீயோரையும் வெறுக்கவில்லை. அவர்களையும் தங்கள் பக்தர்களாகவும் ஆட்கொண்டு அருள் செய்தனர். கிரீஷ் சந்திர கோஷ் என்ற துர்க்குணங்களே வடிவெடுத்த ஒரு குடிகாரனையும் கூட பகவான் ராமகிருஷ்ணர் தமது பக்தனாக ஏற்றுக் கொண்டு, அவனிடம் காணப்பட்ட தீமைகளை அகற்றி அவனை நல்லவனாக மாற்றி அருளினார். என்னே மகான்களின் பரந்துவிரிந்த உள்ளம்!

தேஜஸ் என்ற சமஸ்கிருதச் சொல் ஒளி என்று பொருள்படுகிறது. மகான்களிடத்தில் தேஜஸ் யாண்டும் ஒளிர்வதைக் காணலாம். எவரிடத்தில் புலனடக்கம், ஆரோக்கியம், பிரம்மச்சரியம் முதலியவை காணப்படுகின்றனவோ, அவர்களிடம் தேஜஸ் திகழும். அழகு, மனத்தெளிவு, செயல் திறமை ஆகியவை ஒருங்கிணைந்து தேஜஸாக மலர்கின்றன. மனத்திலுள்ள கீழ்மைகள் அகன்று மேன்மை உறுதி பெறுகிறபொழுது தேஜஸ் ஓங்குகிறது. தளராத மனத்துடன் அயராது முயலுகின்றவர்கள் தங்களது செயல்களில் வெற்றியை அடைகின்றனர். முயற்சி திருவினையாக்கும்.

> उद्यमेन हि सिध्यन्ति
> कार्याणि न मनोरथैः ।
> न हि सुप्तस्य सिंहस्य
> प्रविशन्ति मुखे मृगाः ।।

'முயற்சியினாலேயே காரியங்களில் வெற்றி கிட்டுகிறது. வெறும் ஆசைகளினால் அல்ல. தூங்கும் சிங்கத்தின் வாயில் போய் மிருகங்கள் விழுவதில்லையல்லவா' என்று பொருள்தரும் ஒரு அழகிய சம்ஸ்கிருத சுலோகம் முயற்சியின் அவசியத்தைப் பெரிதும் வலியுறுத்துகிறது. செயல் புரிவது நமது கடமை. ஆனால் அதில் வெற்றி வந்து வாய்ப்பது இறையருளாலேயாகும். முயற்சி, வெற்றி ஆகியவை இறைவனது விபூதிகளாகும். இயற்கை முழுவதும் சத்வ, ரஜஸ், தமஸ் எனும் முக்குணமயமானது. எனினும் இவற்றில் சத்வ குணம்தான் நம்மை இறைநிலைக்கு இட்டுச் செல்ல வல்லதாகும்.

பாண்டவர்கள் ஐவர் எனினும் அவர்களுள் அர்ஜுனனாகத் தாம் இருப்பதாகப் பகவான் பகர்கிறார். தர்மமே வடிவெடுத்த தர்ம புத்திரர், ஆற்றலே வடிவெடுத்த பீமன், அறிவிற் சிறந்த நகுல சகாதேவர்களையெல்லாம் விடுத்து அர்ஜுனனுக்கு இவ்வளவு முக்கியத்துவம் பகவான் கொடுப்பதன் நோக்கம் என்ன? பாண்டவர்கள் ஐவரில் கிருஷ்ணனுடன் இணை பிரியாது இருந்தது அர்ஜுனனே. கிருஷ்ணார்ஜுனர்களை நரநாராயணர்கள் என்றே கூறுவது வழக்கம். நரன் ஜீவன், நாராயணன் பரம்பொருள். எனவே தனது அபார பக்தியினால் கிருஷ்ணனைப் பிரியாது இருந்த அர்ஜுனன் ஜீவ சொரூபம். கிருஷ்ணன் சிவ சொரூபம். சிவமன்றி ஜீவனுக்குத் தனி வியக்தி ஏதும் கிடையாது. அர்ஜுனன் அடைந்த வெற்றிகளுக்கெல்லாம் தானே காரணம் என்று ஒரு போதும் அவன் எண்ணலாகாது, அவனுக்கும் முதற்காரணம் பகவானாகிய தாமே என அவர் அவனுக்கு அறிவுறுத்துகிறார். இது நமக்குச் சிறந்த பாடமாய் அமைகிறது அகந்தையை முற்றிலும் அழித்து 'எல்லாம் ஈசனே' என்ற எண்ணத்தில் நிலைத்திருந்து நாம் சதா செயல்பட வேண்டும் என்பதை நமக்குப் பகவான் இங்கு நினைவுறுத்துகிறார்.

வேதங்கள் இன்றேல் இன்றைய நமது கலாசாரம் இல்லை, வேதங்கள் இன்றேல் நமது ஹிந்து மதமே இல்லை எனலாம். ஹிந்து மதத்திற்கே வேத தர்மம் என்பது மற்றொரு பெயர். அத்தகைய மகிமை வாய்ந்த வேதங்களையெல்லாம் தொகுத்து நமக்கு அளித்த பெருமை வியாசரையே சாரும். மனதை முழுக்க முழுக்க அந்தர்முகமாகச் செலுத்துகையில் மெய்ப் பொருளை அறியவல்ல சக்தி ஒருவரிடம் வந்து வாய்க்கிறது. அவர் முனிவர் எனப்படுகிறார். பூரணத்துவத்தை அடைந்த மாமுனிவர்களுள் தலை சிறந்தவர் வியாஸர். நான்கு வேதங்களையும் தொகுத்துத் தந்தவர் வியாஸர் என்பதை ஒட்டி அவரை வேத வியாஸர் என்றே அழைக்கிறோம். குரு பூர்ணிமா தினத்தையும் வியாசருக்குப் பெருமை அளிக்கும் விதத்தில் வியாஸபௌர்ணமி என்றே அழைக்கிறோம். வேதங்களை மட்டுமல்ல, வேதாந்த சூத்திரங்கள், மகாபாரதம், பதினெண் புராணங்கள் போன்ற பலவற்றையும் தொகுத்துத் தந்த பெருமை வியாஸரையே சாரும். இதனால் வியாஸர் மஹா விஷ்ணுவின் அம்சமே எனப் பலரும் கருதுகின்றனர்.

புற உலகைப் பற்றிய அறிவு மிகுதியாக உள்ளவர்களைக் கவி என்று அழைப்பது பழைய கால மரபு. நாளடைவில் புலமை உடையவர்கள் அனைவரும் கவிகள் எனப்பட்டனர். சுக்கிராச்சார்யார் அசுரர்களின் குரு. அவருக்கு உசனக் கவி என்பது மற்றொரு பெயர். இறந்து போனவர்களைப் பிழைப்பிக்கும் ஆற்றல் அவரிடம் வாய்க்கப் பெற்றிருந்தது. அத்தகைய அவரது ஆற்றலினால் அசுரர்கள் பன்மடங்கு ஆற்றல் பெற்று விளங்கினர். கவிகளுள் தம்மை உசனக் கவி எனப் பகவான் பகருகிறார்.

(தொடரும்)

# தசாவதாரப் பத்து

திரு. தி. ப. பாலசுப்பிரமணியன்-திருப்பத்தூர்.

உலக நாயகன் உள்ளத் தமருநல்
மலர்குழல் ஜானகி துன்பம் தீர்த்தவன்
நிலமும் நீரும் கடந்த மாருதி
மலர்ப்பதம் என்றுமே உள்ளத் திருத்துவாம்!

முந்தைநாள் தேவனுன் திருவடி காணவே
பல்தவம் செய்துமே பலனிலா நான்மறை
அந்தமில் உன்னையே போற்றிய தோத்திரம்
உளமதில் இருத்தியே உவப்புடன் ஊழியில்
எந்தைநீ கடல்தனில் மறைந்தநான் மறைகளை
காத்திட அன்புடன் தோன்றினை மீனென;
பந்தமே போக்கியென் பிறவியாம் பிணியினை
நீக்கியுன் பதமலர் தருகவென் ஈசனே!

(வேறு)

தேவரும் அசுரர் தாமும் முன்னைநாள்
திருப்பாற் கடலை
மேவிய அமுதம் வேண்டி திண்ணமாய்
கடைந்த காலை
தேவநீ! அன்பு கொண்டே மேருவை தாங்கி நிற்க
ஓவியத் தெழுத வொண்ணு உருவத்தாய்!
கூர்ம மானுய்!

(வேறு)

மலாதலை யுலகினை மாயமாய் கடல்தனில்
மன்பதை துன்புற மறமெலாம் திரண்டதோர்
வலியுடை அரக்கனும் இரணிய கசிபுவும்
ஒளித்தவந் நாள்தனில் ஒப்பிலா மணியெனும்
தலைவன்நீ தயவுடன் தரணியைக் காக்கவே
வராகமாய் வந்தனை வடிவிலா நாயக!
மலமெலாம் நிறைந்தவோர் பிறவியே என்றெனை
தள்ளாது காத்தருள் தனிப்பெரும் வேதனே!

நாரதன் மாமுனி சொன்னதோர் மந்திரம்
கருவினில் கேட்டதால் காலமும் உன்னையே
நாரண! நாரண! என்றே துதித்த நல்
குழவியாம் பிரக லாதன் அழைத்திட
பூரணன் தோன்றினை தூணும் பிளந்திட;
நரனென சீயமென இணைந்தவோர் வடிவம்
பேரருட் பெருமநீ பெற்றனை! இரணியன்
ஆணவம் தீர்த்தனை! அருளும் தந்தனை!

ஒருநாமம் ஒருருவம் ஒன்றிலா தலைவநீ
அற்றைநாள் மாபலி மமதை நீக்கவே
திருநாமம் 'வாமனன்' என்றே சூடிதான்
மூவடி நிலமதை பெற்றனை கருணையால்;
திருவடி இரண்டினுல் அளந்தனை அகிலமே;
மூன்றினுல் மன்னற்கு திருப்பதம் தந்தனை!
சிறுவனென் பிழையெலாம் பொறுத்துநீ கனிவுடன்
மாயமாம் வாழ்வினை மாய்த்தருள் தேவ தேவா!

சிறந்தவோர் கோயில் தாயவள் என்றும்
உயர்ந்ததோர் மந்திரம் தநதைசொல் என்றும்
பிறப்பினுல் உலகிற் குணர்த்திட எண்ணியே
பரசு ராமனென படிவங் கொண்டனை;
அறமெலாம் தந்தனை; அன்பரைக் காத்தனை;
வரம்பிலா தவமெலாம் இராமற் களித்தனை;
தரணியில் ஏழைநான் பிறவா வாழ்வினை
தட்டிடா தருள்கவே தனிப்பெரும் செல்வநீ!

வாய்மையின் உயர்வைக் காட்ட, அன்புத்
தாயவள் பெற்ற தவமே உலகில்
தூயதாய் ஆக்கி நின்ருய்; வாழ்வில்
ஒருவற்கு ஒருத்தி என்னும் உயர்ந்த
ஏயஅவ் வாசகம் என்றுமே தரணியில்
நிலைத்திட தரித்தனை மானுட வடிவம்
மாயமாம் பிறவி நீக்கும் மன்னனே!
ஏழைக் கருள்கநீ எம்மான் இராமனே!

(வேறு)

நானிலம் உதித்த தாமோர் உயிரெலாம் உறவு
கொள்ள
தேனுலா நாமம் 'ராமன்' அன்றுநீ தரித்து வந்தாய்!
கானமே சென்ற காலை இலக்குவன் செய்த தொண்டே
ஞானமாம் கண்ண னுக்கே அண்ணனுய் வந்த தம்மா!

பாண்டவர் துயரம் தீர்த்தே பாரில்நீ அரசும்
செய்தாய்!
வேண்டிய மங்கை நல்லாள் துருபதை மானங்
காத்தாய்!
காண்டிபன் விசய னுக்கே தத்துவம் 'கீதை' தந்தாய்!
மாண்டிடும் மாய வாழ்வு நீக்கியே அருள்க கண்ணு!

ஒலியெலாம் ஆனுய் நீயே! ஒலிதரும் உயிரும் நீயே!
கலையெலாம் ஆனுய் நீயே! மலையுமண் விண்ணும் நீயே!
கலியுகம் முடியுங் காலை 'கல்கி'யாய் வருவை நீயே!
தலைவநீ ஏழை யேனை தருணமே காத்தி டையா!

★

# செய்திச் சுருக்கம்

## கோடைப்பள்ளி :

தி தி. தேவஸ்தானத்தாரின் இந்து சமயத்தைப் பற்றிய 28-வது 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோடைப்பள்ளி' 4-5-79 அன்று தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்களால் திருமலையில் துவக்கி வைக்கப்பட்டது. திருப்பதி கேந்திரிய ஸம்ஸ்கிருத வித்யா பீடத்தின் முதல்வர் திரு. எம். டி. பாலசுப்ரமணியம் அவர்கள் தலைமை தாங்கினார். 1949 முதல் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் இக் கோடைப்பள்ளியினை நடத்துவதன் நோக்கம் இந்து சமயக் கொள்கைகளை பரப்பவேயாம். இவ்வாண்டு நடைபெறும இக்கோடைப்பள்ளியின் கீழ் 50 மாணவர்களுக்கு 4-5-79 முதல் 31–5–79 வரை பயிற்சியளிக்கப்பட்டது. இப்பயிற்சியின்போது ஒவ்வொருவருக்கும் ரூபாய் 100 ஊக்க ஊதியமாக அளிக்கப்படுவது மட்டுமன்றி அவர்களுக்கு இலவச தங்கு வசதி, இலவச தரிசனம், சலுகைச் சாப்பாடு ஆகியவை வழங்கப்பட்டன. இவ் விழாவின் போது தி தி. தேவஸ்தான பொறுப்பாணைமைக்குழு உறுப்பினர் திரு. சந்திரசேகரம் நாயுடு, திருமலை உதவி செயலாட்சித் தலைவர் திரு. எஸ். முனுசாமி நாயுடு, இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலாளர் திரு. அர்க்க சோமயாஜு மற்றும் பல தி. தி தேவஸ்தான அலுவலர்களும் பங்கேற்றனர். கோடைப்பள்ளியின் இயக்குனர் திரு கிருஷ்ணசாமி ஐய்யங்கார் அவர்களின் பெரும் முயற்சியால், கடந்த மூன்று ஆணடுகளாக நிறுத்தப் பட்டிருந்த இக்கோடைப்பள்ளி இவ்வாண்டு மீண்டும் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

## 3வது ஆண்டு விழா

திருமலை திருப்பதி தேவஸ்தான ஊழியர்சங்கத்தின் 3-வதுவருடாந்திர கலை விழா திருப்பதியில் ஸ்ரீநிவாஸா கலை அரங்கில் 11-5-79 அன்று மாலை 6 மணி அளவில் நடைபெற்றது. திரு. ஜி. சந்தரமோகன் நாயுடு (ஊழியர் சங்கத்தின் உதவித்தலைவர்) அவர்களின் ஆண்டறிக்கையைத் தொடர்ந்து தி தி. தேதஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் தலைமை உரையாற்றினர். ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத தெலுங்குத் துறையின உயர் விரிவுரையாளர் டாக்டர். எம். சுப்பாரெட்டி அவர்கள் சிறப்புரையாற்றினர் திரு. ஆர். நாகபூஷணம் நன்றி நவின்றார். தொடர்ந்து தி. தி. தேவஸ்தான ஊழியர்கள பங்கேற்ற ''ஸ்ரீநிவாஸா கல்யாணம்'' எனும் புராண நாடகம் நடைபெற்றது.

## ஜெயந்தி விழா

ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மீது ஆயிரக் கணக்கான பக்திப் பாக்களை இயற்றிய கி. பி 15-ம நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்குக் கவிஞரான ஸ்ரீ தாள்ள பாக்க அன்னமாச்சார்யாவின் 571-வது பிறந்த நாள் விழா 12-5-79 முதல் 14-5-79 வரை திருப்பதியில் வெகு விமர்சையாகக் கொணடாடப் பட்டது. ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டத்தின் சிறப்பு அலுவலர் திரு. கே. ஸ்ரீநிவாசலு செட்டியின் ஆண்டறிக்கையினைத் தொடர்ந்து, கூட்டத்தினரை வரவேற்றுப்பேசிய தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் தம் உரையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளை புகழ்படுத்தும் வகையில் தி. தி. தேவஸ்தானம் மேற்கொண்ட முயற்சிகளைக் குறிப்பிட்டு, அன்னமாச்சார்யா காலத்தைச் சார்ந்த ஸ்ரீ புரந்தரதாஸரின கீர்த்தனைகளின் பெருமையினை பரப்பும் வகையிலும் ஒரு துணைத்திட்டம் மேற்கொள்ளப்பட உளளது என றும கூறினா. பிறகுஅனனமாச்சாரயா பாக்களின் சிறப்பினை வெளிஉலகிற்கு எடுத்துககூறியதில் பெரும் பங்கு வகித்த அறிஞரான திரு. வேட்டூரி பிரபாசர சாஸதிரி அவர்களுடைய திருவுருவப்படத்தினைத் திறநதுவைத்தார். விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய திரு. பி. ரஜனிகாநதராவ் அவர்கள தம்முரையில் தெலுங்கு இலக்கியத்தில் அன்னமாச்சாரயாவின் பங்கினைபபற்றி விளக்கிக் கூறி, ஸ்ரீ தியாகராஜர், சூர்தாஸ், கபீர்தாஸ் போன்ற இசைக் கவிஞர்களின் பக்திப் பாதைக்கு அன்னமய்யா கீர்த்தனைகள் ஒரு வழிகாட்டியாக விளங்கின என்றும் கூறினர். பின்னர் இவ்விழாவில் பங்கேற்ற திரு. குண்டூர் சேஷேந்திர சர்மா அவர்கள் தம் சிறப்புரையில் அன்னமய்யா பாடல்களில் பொதிந்துள்ள இலககியப் பண்புக் கூறுகளையும அப்பாடல்கள் கொண்டுள்ள எளிமையான அழகான பாடற் கூறுகளையும் விளககிக் கூறினா. குமாரி. ஆர். ஜி. ஷோபாராஜு நன்றி கூறினர். பினனர் அன்னமய்யாவின் வாழ்க்கையினைச் சித்தரிக்கும் வகையில் இசை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. இரண்டாம் நாளான 13-5-79 அன்று திரு. சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாசராவ் அவர்களின் இன்னிசைக் கசசேரியும்,

---

## சந்தாதாரர்களுக்கு...

31-7-79-ம் தேதியுடன் சந்தாக் காலம முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுசகப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேணடிய தொகையைச் செலுத்தி தங்கள் சநதாவைப் புதுப்பித்துக் கொள்ளவும. T

36, 39, 79, 85, 111, 117, 118, 127, 134, 137, 153, 185, 252, 253, 254, 255, 256, 257, 258, 259, 261, 263, 264, 265, 266, 267, 268, 320, 417, 438, 439, 440, 441, 442, 444, 446, 447, 448, 449, 495, 838, 868, 869, 870, 871, 872, 874, 875, 876, 877, 878, 879, 880, 881, 882, 883, 884, 885, 886, 887, 888, 889, 890, 891, 892, 893, 894, 895, 896, 897, 898, 900 முதல் 913 வரை, 927, 930, 931, 1027, 1041, 1045.

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

## "சுந்தர காண்டம்"

அடுத்து இராவணனின் இளைய மனைவியான தான்யமாலினி என்பவள் கூறுகிறாள்.

**उपगम्य ततः क्षिप्रं राक्षसी धान्यमालिनी**
**परिष्वज्य दशग्रीवमिदं वचनमब्रवीत् ।**
**मया क्रीड महाराज सीतया किं तवानया ॥**

இவள் ராக்ஷஸியாக இருந்தாலும் மந்தோதரியைவிட ஒருபடி மேலே சென்று விட்டாள். 'ஹே! ராக்ஷஸேந்த்ர!! நான இருக்கும்போது என்னிடம் உன் காமத்தை தணித்துக் கொள். சீதையினிடம் பிடிவாதம் செய்யாதே' என்று. மேற்கூறிய கருத்துக்களை கம்பர் கூறவில்லை.

**पक्षी च शाखानिलयः प्रहृष्टः पुनः**
**पुनश्चोत्तमसान्त्ववादी ।**
**सुस्वागतां वाचमुदीरयानः पुनः**
**पुनश्चोदयतीवहृष्टः ॥**

இந்த ச்லோகத்திற்கு வ்யங்க்யார்த்தமாகப் பொருள் கூறப்படுகிறது.

இராமாயணகாவ்யம் உத்தம காவ்யமாகும். உத்தம காவ்யத்திற்கு இலக்கணம் "**यत्र वाच्यातिशायि - व्यङ्ग्यं तदुत्तमं काव्यम्**" எனறு கூறப்பட்டுள்ளது சுந்தரகாண்டத்தின ஆரம்பச்லோகம '**ततो रावणनीतायाः**' என்பதாகும் இநதக் காண்டத்திற்கு வேதாந்த ரீதியாகக் பொருள கொள்ளலாம என்பதை மேற்கூறிய ச்லோகத்திற்கு இவவாறு பொருள் கூறுகிறார்கள் பெரியோர்கள். சுநதரகாண்ட நிகழச்சி முழுவதும் இலங்கையிலேயே நடக்கிறது. ஆகையால் இலங்கையை ஒரு மனிதசரீரமாகக் கூறப்படுகிறது. ஏகாக்ஷி என்று பெயருள்ள அரக்கியர்களை இந்திரியங்களாகவும், இராவண, கும்பகர்ண, முதலான அரக்கர்களை அஹங்கார, மமகாரங்களாகவும், இந்திரஜித் முதலான அரக்கர்களை காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யம் முதலான கெட்டகுணங்களாகவும், இலங்கை என்ற சரீரத்தில் அடைபட்டுக் கிடக்கும் சீதையை சேதனனாகவும், அந்த சேதனனுக்கு ஞானத்தை உபதேசிக்கிற ஆசாரயனாக ஹநுமானையும் நாம் கொள்ள வேண்டும். இபபொழுது ச்லோகத்தின கருத்தைக் கவனிப்போம். "**पक्षी**" என்ற பதத்தால் ஆசார்யனைக குறிககலாம்

**उभाभ्यामपि पक्षाभ्यां यथा खे पक्षिणां**
**गतिः ।**
**तथैव ज्ञानकर्मभ्यां नियता परमा गतिः ॥**

ஆசார்யனை பக்ஷியாகக் கூறுவதற்குக் காரணம் எவ்விதம் பறவைகள் தன இரு இறக்கைகளால ஆகாயத்தில் பறகக முற்படுகிறதோ அதே போல ஆசாரியன் ஞானம்-கர்மம என்ற இரு இறக்கைகளைக கொணடு மோக்ஷத்தை அடைய முற்படுகிறான். ஞானமும் கர்மாவும் ஒன்றோடொன்று பிணைந்து நிற்கின்றன.

**ब्राह्मणाः विविदिषन्ति यज्ञेन दानेन तपसानाशकेन**
**आचिनोति हि शास्त्रार्थानाचारे स्थापयत्यपि ।**
**स्वयमाचरते यस्मात्तस्मादाचार्यं उच्यते ॥**

அதாவது சாஸ்த்ரங்களில் கூறியபடி எவன் நடக்கிறானோ, நடத்துகிறானோ அவனே ஆசார்யன் என்று கூறப்படுகிறது.

வேத அத்யயனம் செய்வது கடினம. அதை ஒருவன் செய்தால் அதை நன்கு மனப்படமாக நிலை நிறுத்தி வைத்துக் கொள்ளவேணடும். இவ்விஷயத்தைத்தான் **शाखा निलय** என்ற பதங்கள் போதிக்கின்றன அவ்விதம் நிலையாக வேதத்தை வைத்துக் கொள்ளாமல் மறநது விட்டால் அதற்கான தோஷம் சிக்ஷையில் கூறப்பட்டுள்ளது

**अधीतमपि यो वेदं विमुञ्चति नराधमः ।**
**भ्रूणहा स तु विज्ञेयो वियोनिमधिगच्छति ॥**

எந்த மனிதன் வேதத்தை கற்று மறககிறானோ அவன் அந்தணரைக் கொன்றபாபத்தை அடைகிறான். அத்தோடு அல்லாமல் கெட்டபிறவியையும் அடைகிறான் என்று. வேதங்களை நன்கு கற்றவன்தான் ஆசார்யன, குரு என்று அழைக்கப்படுகிறான்.

(தொடரும்)

---

(37-ம் பககத் தொடர்ச்சி)

புகழ்பெற்ற திரைப்படப் பின்னணிப் பாடகர் திரு. பி. பி. ஸ்ரீநிவாஸ் அவர்களின் மெல்லிசைக் கச்சேரியும் நடைபெற்றன.

விழாவின் இறுதி நாளான 14-5-79 அன்று திருவாளர்கள். சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாசராவ் அவர்கள் (வாய்ப்பாட்டு) யெல்ல வெங்கடேஸ்வர ராவ் அவர்கள் (மிருதங்கம்) பாபு அவர்கள்(சித்திரம்), யாமினி கிருஷ்ண மூர்த்தி அவர்கள் (நாட்டியம்) தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்களாக கௌரவிக்கப் பட்டனர்.

அன்று மாலை யாமினி கிருஷ்ண மூர்த்தி அவர்களின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது.

### குருவாயூரில் தகவலறிவிப்பு நிலையம்

கேரள மாநிலததில் குருவாயூரில், தி. தி. தேவஸ்தானத்தாரின் 32-வது தகவலறிவிப்பு நிலையததினை கேரள மாநில ஆளுநா திருமதி. ஜோதி வெங்கடாசலம் அவர்கள் 2-5-79 அன்று திறந்து வைத்தார். மேலும் அங்கு தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மணடபம் ஒன்றிற்கும் அடிக்கல் நாட்டினார். இவ்விரு விழாக்களுக்கும் கேரள மாநிலத்தின் முன்னாள் அற நிலைய அமைச்சர். திரு. கே. கே. பாலகிருஷ்ணா அவர்கள் தலைமை வகித்தார். ஆளுநர் அவர்கள் நிலையத்தினை திறந்து வைத்து உரையாற்றுகையில் சமயமும், சமுதாயமும் இணைநது செயல்பட வேணடியதன் அவசியததைக் குறிப்பிட்டுப்பேசினார். அவ்விழாவில பஙகேற்று உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி.வி. ஆர்.கே. பிரஸாத அவாகள் தம்முரையில் நாட்டிலுளள கோயில்களைப் புதுப்பிகக தி.தி.தே. ஒவ்வொரு ஆண்டும் சுமார் ரூ. 1 கோடியும், சமய நூல்களை வெளியிட சுமார் ரூ. 50 இலட்சமும் செலவழிதது வருகிறது எனறு கூறினா. இவ்விழாவில் குருவாயூர் தேவஸவம் மேலாணமைக் குழுவின் தலைவர் திரு. டி. எஸ். நாயா, தேவஸ்வத்தின் நிருவாகி திரு டி. சி. பாலகிருஷ்ணா ஆகியோர் பங்கேற்றனர். இவ்விழாவிற்கு வருகை புரிந்தோரை கேரள மாநிலத்தின் முனனாள் கல்வி அமைச்சர் திரு. என். கே சேஷன் அவர்கள் வரவேற்றார். விழா இறுதியில் திரு. சொவ்வனூர் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நன்றி நவின்றார்.

# ராசிபலன் (1-6-79 முதல் 30-6-79 வரை)

டாக்டர் டி: அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.

### மேஷம்

ராகுவினால் கவலைகள்; சனியினால் கருதது வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம் அல்லது பிள்ளைகள் அல்லது பெணகளுடன் பிரிவு; குருவினால் உறவினர்கள் மூலம் துன்பங்களுக்குள்ளாதல்; செவ்வாயினால் 17-ம் தேதி வரை கவலைகள், இறுதியில் அலுவலகக் கவலைகள் அல்லது கருத்து வேறுபாடுகளினால் மனக்கவலைகள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல்; சுக்கிரனால் 6-ம் தேதி வரை நல்லன நடைபெறல், இறுதி நாட்களின்போது பண வரவு, மதிப்புயர்தல் அல்லது மக்கட்பேறு; சூரியனால் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல் அவ்லது கண சம்பந்தப்பட்ட நோயினால் அவதிப்படல், இறுதி நாட்களின்போது பண வரவு, மதிப்புயர்தல் மற்றும் பதவி உயர்வு; புதனால் 6-ம் தேதி வரை பண வரவு ஆனால் இகழ்ச்சிக்குள்ளாதல், இறுதி நாட்களின்போது புதிய நண்பர்கள் ஆனால் 22-ம் தேதி வரை தனனுடைய நடவடிகையின் காரணமாக அஞ்சுதல். இறுதியில் குடுமபததில் மகிழ்ச்சி.

### ரிஷபம்

ராகுவினால் கருத்து வேறுபாடுகள்; சனியினால் பணநஷ்டம் அல்லது நட்பு முறிதல் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு; குருவினால் ஏமாற்றங்கள்; செவ்வாயினால் பண நஷ்டம் அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்; சூரியனால் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதிப்படல். இறுதி நாட்களின்போது மற்றவர்களால் ஏமாற்றப்படல் அல்லது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதிக்குள்ளாதல்; சுக்கிரனால் முதல் 6 நாட்களின் போது எந்தவித நன்மையும் தீமையும் ஏற்படா. ஆனால் இறுதி நாட்களின் போது கேளிக்கைகளில் ஈடுபடல். புதனால் முதல் 6 நாட்கள் வரை தவறான ஆலோசனைகளைக் கேட்டதனால் அல்லது கருத்து வேறுபாடுகளினால் பண நஷ்டம் ஏற்படல். அதன் பிறகு 22-ம் தேதிவரை பணவரவு ஆனால் இகழ்ச்சிக்குள்ளாதல இறுதியில் புதிய நட்புறவுகள். ஆனால் தான் மேற்கொண்ட தீய நடவடிக்கைகளின் காரணத்தால் அஞ்சுதல்.

### மிதுனம்

ராகுவினால் பண வரவு, சனியினால் குடுமபத்தில் மகிழ்ச்சி, உடலநல மேன்மை, அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வாகனவாயப்பும்கூட; குருவினால் பண வரவு, வெற்றியும்; செவ்வாயினால் 17-ம் தேதி வரை எல்லா வகைகளிலும் வெற்றி வாய்க்கப்பெறல் ஆனால் பிறகு பண நஷ்டம் ஏற்படுவதால் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மையால் அல்லது கண சமபந்தப்பட்ட நோயினால் அவதியுறுவதால கவலைகளுக்குள்ளாதல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்கள் வரை எந்தவித மாற்றமும் கிடையாது. ஆனால் பிறகு பண நஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்; சுக்கிரனால் 6-ந் தேதி வரை புதிய நல்ல நண்பர்கள், பண வண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் ஆனால் இறுதி நாட்களின்போது எந்தவித நன்மை தீமையும் ஏற்படாது; புதனால் மாதத்தின் முதல் 6 நாட்கள் வரை எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல். பிறகு 22-ந் தேதி வரை தவறான ஆலோசனைகளைக் கேட்டதனால் அல்லது கருத்து வேறுபாடுகளினால் பண நஷ்டம், மாதத்தின் இறுதி நாட்களின்போது பண வரவு ஆனால் மதிப்புக் குறைதல்.

### கடகம்

ராகுவினாலும், சனியினாலும் பண நஷ்டம்; குருவினால் பொருள் நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக் குறைதல்; செவ்வாயினால் மேற்கூறிய மூன்று கிரகங்களினால் ஏற்படும் தீய விளைவுகளை எதிர்கொள்ளும் வகையில் பண வரவும், வெற்றியும் ஏற்படல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நல மேன்மையும் வெற்றியும் ஏற்படல் ஆனால் இறுதி நாட்களின்போது எந்தவித மாற்றமும் ஏற்படாது சுக்கிரனால் மாதத்தின் முதல் 6 நாட்கள் வரை கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக் கெடல். ஆனால் இறுதி நாட்களின்போது நல்ல நண்பர்கள், பணவரவு; மாதத்தின் 6-ம் தேதி வரை புதனால் பண வரவு, நல்ல நணபர்கள அல்லது கேளிக்கைகளில ஈடுபடல் அல்லது வாகன வாய்ப்பு. அதற்குப் பிறகு 22-ம் தேதி வரை எதிரிகள் ஏற்படல் அல்லது மதிப்புக் குறைதல் அல்லது உடல் நலம் கெடல். இறுதி நாட்களில கருத்து வேறுபாடுகளினாலோ, தவறான ஆலோசனைகளைக் கேட்டதனாலோ பண நஷ்டம்.

### சிம்மம்

ராகுவினால் கவலைகள்; சனியினால் பண நஷ்டம அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள் அலலது பிரயாணம் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது உறவினர் ஒருவருக்கு கெடுதி செய்தல்; குருவினால் பிரயாணமும், உடல்நலம் கெடலும்; செவ்வாயினால் மாதத்தின் 17-ம தேதி வரை இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது பண நஷ்டம ஆனால் இறுதியில் மகிழ்ச்சி, சூரியனால் வெற்றி, மதிப்புயர்தல், பண வரவு, உடல் நல மேன்மை: சுககிரனால் மாதத்தின் 6-ம் தேதி வரை மகிழ்ச்சி, பண வரவு அலலது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது சமய நிகழ்ச்சிகளில் பங்கேற்றல் ஆனால் இறுதியில கருத்து வேறுபாடுகள் மற்றும் மதிப்புக்குறைதல்; புதனால் மாதத்தின் முதல 22 நாட்களின்போது பண வரவு, வெற்றி, குடும்பத்தில் மகிழ்ச்சி, புதிய நல்ல நணபர்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு ஆனால் இறுதியில் எதிரிகள் ஏற்படல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக் குறைதல்.

### கன்னி

ராகுவினாலும், சனியினாலும் கவலைகள; குருவினால் அதிக பண வரவு; செவ்வாயினால் பண நஷ்டம் அல்லது மதிப்புக்கெடல்; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது ஏமாற்றங்கள் அல்லது உடல் நலம் கெடல் ஆனால் இறுதி நாட்களின்போது மதிப்புக் குறைதல், எல்லாவகையிலும் வெற்றி; சுக்கிரனால் மாதத்தின் முதல் 6 நாட்கள் வரை புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வீடு வாய்ப்பு இறுதி நாட்களின் போது மகிழ்ச்சி, பண வரவு அல்லது ஆடை ஆபரணங்கள் அல்லது ஒரு நன் முயற்சியில் ஈடுபடல, புதனால் 6-ம் தேதி வரை ஏமாற்றங்கள் பிறகு 22-ம் தேதி வரை பண வரவு, வெற்றி, மகிழ்ச்சி. இறுதி நாட்களின் போதும் பண வரவு அல்லது மக்கட்பேறு அல்லது நல்ல நட்புறவுகள் அல்லது வாகன வாயப்பு.

### துலா

ராகுவினால் மகிழ்ச்சி; சனியினால் கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது

பண வரவு; குருவினுல் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்; செவ் வாயினுல் 17-ம் தேதி வரை மனைவி யுடன் கருத்து வேற்றுமை கொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப் பட்ட தொந்தரவுகளினுல் அவதி யுறல். இறுதி நாட்களின்போது பண நஷ்டம் அல்லது மதிப்புக குறைதல்; சூரியனுல் மாதத்தின் முதல 15 நாட் களினபோது மனைவிக்கு மகிழ்ச்சி யின்மை அல்லது உடல் நலம் கெடல். இறுதி 15 நாட்களின்போது பண நஷடம் அலலது ஏமாற்றங்கள் அல்லது உடல் நலம் கெடல்; சுக்கிர னுல் மாதத்தின் முதல் 6 நாட்களின் போது பெண்களின் மூலம் துன்பங் களுக்குளளாதல் ஆனுல் மீதி நாட் களின் போது பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வீடு வாய்ப்பு; புதனுல் மாதத்தின் முதல் 6 நாட்களின்போது பண வரவு, வெற்றி அல்லது புதிய ஆடை ஆபர ணங்கள் அல்லது மக்கட்பேறு, ஆனுல் பிறகு 22-ம் தேதி வரை முயற்சிகள் தடைபடுதல். அதற்குப் பிறகு இறுதி நாட்களின்போது பண வரவும் வெற்றியும்.

விருச்சிகம்

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல்; குருவினுல் பண வரவு மற்றும் வெற்றி, அல்லது தானியவகைகள் அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் மாதத்தின் முதல் 17 நாட்களின்போது பண வரவு, வெற்றி ஆனுல் இறுதி நாட்களின்போது மனைவியுடன கருத்து வேறுபாடுகள் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப் பட்ட நோயினுல் அவதியுறல்; சூரிய னுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல அவதி யுறல். இறுதி நாட்களினபோது உடல் நலம் கெடல் அலலது மதிப்புக் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழச்சி யின்மை; சுக்கிரனுல் மாதத்தின் 6-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்கெடல். இறுதி நாட் களின்போது பெணகளின் மூலம் கவலை களுக்குள்ளாதல்: புதனுல் 6-ம் தேதி வரை வெற்றி அல்லது பதவி உயர்வு அதற்குப் பிறகு 22-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள் இறுதி நாட் களின்போது வெற்றி அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அலலது பண வரவு அல்லது மக்கட்பேறு.

தனுசு

ராகுவினுல் குற்றங்களில் ஈடுபடல்; சனியினுல் உடல் நலம் கெடல் அல்லது கருதது வேறுபாடுகள் அல்லது தவ றுன நடவடிக்கைகளில் ஈடுபடல், குருவினுல் உடல் நலம் கெடல் அல்லது பிரயாணம் அல்லது அலுவலகக் கவலை கள்; செவ்வாயினுல் 17-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் அஞ்சுதல் அல்லது தன னுடைய பிள்ளைகள் அல்லது பெண களின் காரணமாக கவலைகளுக் குள்ளாதல். ஆனுல் இறுதி நாட்களின் போது உடல் நலம் மேன்மை, பண வரவு, வெற்றி; சுக்கிரனுல் 6-ம் தேதி வரை விருநதினர் வருகை, பெரியோர் களின் பாராட்டுதலுக்குள்ளாதல், பண வரவு அல்லது மக்கட்பேறு. இறுதியில் உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்கெடல; சூரியனுல மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, வெற்றி, ஆனுல் இறுதி நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப் பட்ட நோயினுல் அவதிப்படல், புத னுல் 6-ம் தேதி வரை கருத்துவேறு பாடுகள் இறுதி நாட்களின்போது பண வரவு, வெற்றி அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட் பேறு.

மகரம்

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் மனைவி அல்லது பிள்ளைகளுடன் பிரிவு; குருவினுல் மகிழ்ச்சி மற்றும் கேளிக்கைகளில் ஈடுடல்; செவ்வா யினுல் 17-ம் தேதி உடல் நலம் கெடல் அல்லது வயிறு சமபந்தப்பட்ட நோயி னுல் அவதிப்படல் அல்லது தீய நபர் களின் நட்பினுல் துனபங்களுக் குள்ளாதல் இறுதியில் உடல் நலம் கெடல் எதிரிகளால் அஞ்சுதல் அல்லது பிள்ளைகளின பொருட்டு கவலைகளுக் குள்ளாதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் கெடல் எதிரிகளால் கவலைகளுக் குள்ளாதல் ஆனுல் இறுதி நாட்களின போது உடல் நல மேன்மை எதிரிகளை வெற்றி கொளல்; சுக்கிரனுல் 6-ம் தேதி வரை நல்ல நண்பர்கள் இறுதி நாட்களின்போது விருந்தினர் வருகை அல்லது பெரியோர்களால் புகழப் படல் அல்லது பண வரவு மற்றும் நண்பர்கள் அல்லது மக்கட்பேறு; புத னுல் 6-ம் தேதி வரை மனைவி அல்லது பிள்ளைகளுடன கருத்து வேறுபாடு கொளல். அதற்குப் பிறகு 22-ம் தேதி வரை வெற்றி அல்லது பதவி உயாவு, இறுதி நாட்களின் போது கருத்து வேறுபாடுகள்.

கும்பம்

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பிரயாணம்; குருவினுல் மன அமைதி பறிபோதல்: செவ்வா யினுல் 17-ம் தேதி வரை தவறுன வழி யில் அல்லது பிள்ளைகளின் மூலம் பண வரவு ஆனுல் இறுதி நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது தீய நபர் களின் நட்பினுல் கவலைகளுக்குள் ளாதல்; சூரியனுல் உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள உண்டாதல்; சுக்கிர னுல் 6-ம் தேதி வரை மதிப்பு உயர்தல் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது எதிரிகளை வெறறி கொளல் பிறகு நல்ல நட் புறவுகள்; புதனுல் 6-ம தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி அதறகுப் பிறகு 22-ம் தேதி வரை மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள். இறுதி நாட்களின் போது பண வரவும் வெறறியும்.

மீனம்

ராகுவினுல் பண வரவு; சனியினுல் உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல்; குருவினுல் பண வரவு அல் லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு அல்லது புதிய ஆடை ஆபர ணங்கள்; செவ்வாயினுல் 17-ம் தேதி வரை அலுவலக வேலை அல்லது எதிரி கள் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல நலம் கெடல் அல்லது வீட்டில திருடு போதல் காரணமாக கவலைகளுக்குள்ளாதல் ஆனுல் இறுதி யில் தவறுன வழியில் அல்லது பிள்ளை கள் மூலமாக பண வரவு; சூரியனுல் மாதததின் முதல் 15 நாட்களின் போது பண வரவு அல்லது பதவி உயர்வு அலலது எதிரிகளை வெற்றி கொளல ஆனுல் இறுதி நாட்களின் போது உடல் நலம் கெடல்; சுககிர னுல் பண வரவு, வெற்றி, மதிப்பு உயாதல அலலது தானிய வகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட்பேறு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள; புதனுல் மாதத்தின முதல் 6 நாட்கள் வரை புதிய நண்பர்கள். ஆனுல் தன் னுடைய தீய நடவடிக்கையின் காரண மாக அஞுசுதல். அதற்குப் பிறகு 22-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி. இறுதி நாட்களின்போது மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறு பாடுகள்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

சென்னையிலுள்ள ரூ. 10 இலட்சம் மதிப்புள்ள வி. வி. ரெட்டி தர்மசாலை திதி தேவஸ்தானத்திற்கு இனமாக அத்தர்ம சாலையின் நிருவாகத்தினரால் 19-4-79 அன்று வழங்கப்பட்டது.



இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது தமிழ்நாடு உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி மாணபுமிகு திரு டி. ராமபிரஸாத ராவ் அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார்.

வி. வி. ரெட்டி தர்மசாலை — சென்னை.



# திருமலை யாத்திரிகர்களுக்கான வசதிகள்

* திருப்பதியிலும் திருமலையிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக தி. தி. தேவஸ்-தானத்தாரின் இலவச சத்திரங்கள்

* திருப்பதியிலும் திருமலையிலும் குறைந்த வாடகையில் வசதியான காட்டேஜுகள்

* திருப்பதியிலும் திருமலையிலும் இலவச மருந்தகங்கள்

* திருப்பதியில் முதல் சத்திரம், மூன்றாவது சத்திரம், விரைவு பேருந்து நிலையம் ஆகியஇடங்களிலிருந்தும்திருமலைக்குச் செல்லும்படியான பேருந்துவசதிகள்

* திருப்பதியிலிருக்கும் தி. தி. தேவஸ்தான சத்திரங்களிலிருந்தும், அலிபிரி (மலையடி வாரம்) யிலிருந்தும் யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருமலைக்கு எடுத்துச் செல்லும்படியான வசதிகள்

* திருமலைக்கு நடந்து செல்லும் யாத்திரிகர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் வழிநெடுகிலும் இரவும்பகலும் போலீஸாரின் காவலுலாவு உண்டு

* வழி நெடுகிலும் குடிநீர் வசதிகள்

* இரவு நேரங்களிலும் யாத்திரிகர்கள் திருமலைக்கு நடந்து செல்வதால் வழி நெடுகிலும் நன்கு வெளிச்சம் பாயும் சிறந்த மின்விளக்கு வசதிகள்

* நடைபாதையில் முதலுதவி வசதிகளுடன் கூடிய வைத்தியசாலை

* திருமலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தில் (C. R. O.) செயற்படும் தகவல் கௌண்டரில் தரிசனம், தங்கும் வசதி போன்றவை பற்றிய தகவல்கள் இந்தியாவில் பெரும்பான்மையோர் பேசும் மொழிகளில் கிடைக்கும்

* திருமலையில் யாத்திரிகர்கள் பல்வேறு பகுதிகளில் தங்க நேரிடுவதால் அவர்களுக்கு உதவும் வகையில் இலவச பேருந்து போக்குவரத்து வசதி

* உடல்நிலை அல்லது நேரமில்லாமையின் காரணமாகவோ அன்றி வேறு பல காரணங்கள் முன்னிட்டோ ஸர்வதரிசன "க்யூ" வில் காத்திருக்க முடியா யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில், சிறப்பு தரிசன டிக்கெட்டு வசதி

* நாட்டில் உள்ள ஆந்திரா வங்கியின் குறிப்பிட்ட பல்வேறு கிளை அலுவலகங்களில் சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்கப்படல்